





# பரகாலன் பனுவல்

வலம் திகழும் குமுதவல்லி மணவாளன் திருமங்கையாழ்வார்


பதிப்பாசிரியர் :

வித்வான் சிரோமணி யதீந்த்ரப்வணப்ரபாவம் பிள்ளைலோகம்

ஸ்ரீ உ. வே. ஸ்தலசயனத்துறைவார் ஸ்வாமி

ஸ்ரீ



ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

# பரகாலன் பனுவல்



பதிப்பாசிரியர் :

வித்வான் சிரோமணி யதீந்த்ரப்ரவணப்ரபாவம்

பிள்ளைலோகம் ஸ்ரீ உ. வே.

**ஸ்தலசயனத்துறைவார் ஸ்வாமி**

பரிசோதகர்:

ஸ்ரீ உ. வே **தி. அ. கிருஷ்ணமாசாரியார் ஸ்வாமி**

காஞ்சீபுரம்

**1989**

ஸ்ரீ:



# திருமலை திருப்பதி பெரிய ஜீயர் ஸ்வாமி அருளிய மங்களாசாஸனம்

ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

ஸ்ரீமத் வரவரமுநயே நம : |

ஸ்ரீ. உ. வே. பிள்ளைலோகம் ஸ்தலசயனத்துறைவார் ஸ்வாமி ''பரகாலன் பனுவல்' என்கிற இந்நூலை அச்சிட்டு வெளியிடுகிறார். பூர்வாசாரியர்களின் உரைகளைப் பின்பற்றி இந்த ஸ்வாமி சுருக்கமாகவும், தெளிவாகவும் இந்நூலில் உரை எழுதி இருக்கிறார். மஹான்களின் அன்பும் ஆதரவும் பெற்றுச் சீரிய பண்புடைய-வராகவும், சொல்லாற்றலும் எழுத்தாற்றலும் கொண்ட உபய வேதாந்த வித்வானாகவும் விளங்கும் இந்த ஸ்வாமி எழுதிய இந் நூல் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும், மற்றும் தமிழார்வம் கொண்டவர்களுக்கும், பேரின்பம் அளிக்கவல்லதாகும்.

மிகவும் பிரசித்தி பெற்று விளங்கிய ஸ்ரீபிள்ளைலோகார்ய (ஜீய)ரின் திருவம்சஸ்தவரான இவருக்கும் இவரது குடும்பத் தினருக்கும் அலர்மேல்மங்கை மணாளனாகிய திருவேங்கட-முடையான் எல்லா வகையான நன்மைகளையும் அருள்வானாக.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# அணிந்துரை

ஸ்ரீ உ. வே. யதீந்த்ரப்ரவணப்ரபாவம் பிள்ளைலோகம் ஸ்தல சயனத்துறைவார் (சிரோமணி, வித்வான்) ஸ்வாமி, திருமங்கை யாழ்வார் அருளிய பெரியதிருமொழியில், ''கோயில் திருமொழி'' என்று பொதுவாக திவ்யதேசங்களில் ஸேவிக்கப்படுகின்ற — வாடினேன்வாடி., தாயே தந்தை, நண்ணாதவாளவுணர், தூவிரியமலருழக்கி, நும்மைத்தொழுதோம், பண்டை நான் மறையும். பெடையடர்த்த மடவன்னம், கண்சோரவெங்குருதி, தெள்ளியீர், மூவரில் முன்முதல்வன் காதிற்கடிப்பிட்டு, மாற்றமுள என்று தொடங்கும் முக்கியமான பன்னிரண்டு பதிகங்களுக்கும், திருவல்லிக்கேணி பதிகமாகிய விற்பெருவிழவுப் பதிகத்திற்கும், இன்னும் சில திவ்யதேசங்களில் அநுஸந்திக்கப் படுகின்ற அக்கும்புலியின் பதிகத்திற்கும், சுருக்கமானதொரு உரையைப் பூர்வர்களின் உரையைத் தழுவி எழுதி வெளியிட்டுள்ளார். 'பரகாலன் பனுவல்' என்ற திருநாமம் பெற்ற இவ்வுரை நூல், ஒவ்வொரு பதிகத்திற்கும் அவதாரிகையும், ஒவ்வொரு பாட்டிற்குச் சுருக்கமான கருத்துரையும், ஒவ்வொரு பாசுரத்திற்கும் முக்கியமென்று இவ்வுரையாசிரியர் கொண்டதொரு ரஸமான கருத்துமாக முப்பகுதிகளுடன் கூடி எளிய நடையில் அமைந்துள்ளது. கோயில் திருமொழிக்கென்று யாரும் இதுகாறும் உரை-யெழுதி வெளியிடாத குறை ஒருவாறு இவ்வெளியீட்டால் தீருமென்று கருதுகிறேன்.

இதன் கண் இவர்— 'இற்பிறப்பறியீர் இவரவ ரென்னீர் (பக்-4), 'நீர்வண்ணன் மார்வகத்தில்' (பக்-13), பிணங்களடு காடதனுள் (பக்-16). 'பெண்மையென்? (பக்-45) இத்யாதியான நல்லபாடங்களைக் கையாண்டிருப்பது மிகவும் சிந்தித்து இன்புறத் தக்கதாகும்.

இப்புத்தகத்தை எல்லோரும் வாங்கிப் படித்து மகிழ்ந்து ஆழ்வாருடைய திருவருளுக்கு இலக்காக வேணுமென்றும், எல்லோருடனும் கலந்து பழகும் நற்பண்புடைய இவ்வுரையாசிரியர் ஸ்ரீவேங்கடகிருஷ்ணன் திருவடிவாரத்தில் பற்பல கைங்கர்யங்களைச் செய்து கொண்டும், லிப்கோகம்பெனியாரின் நாலாயிர திவ்யப்ரபந்தம் முதலான பல வெளியீடுகளுக்குப் பேருதவி புரிந்தது போலவே மேன்மேலும் பலபல நற்பணிகளைச் செய்து கொண்டும் பல்லாண்டு காலம் வாழவேணுமென்றும், அடியோம் குலதெய்வமாகிய அலர்மேல்மங்கையுறைமார்பனுடைய பூவார் பொன்னடிகளில் ப்ராத்திக்கிறேன்.

பெருமாள்கோயில்
18—6—89

இங்ஙனம்
தி. அ. க்ருஷ்ணதாஸன்

# அட்டவணை

# பரகாலன் பனுவல்.

## (கோயில் திருமொழி)

அன்பர்காள்!

கோயில் திருவாய்மொழி என்ற சொல்லை நாம் பல்காலும் கேட்டிருக்கிறோம்; கோயில் திருமொழி என்ற வார்த்தையை அந்த அளவுக்குக் கேட்கும் வாய்ப்பு இல்லை. அருளிச்செயல் ஸேவிக்கும் பாக்யமுடையவர்களில் அநுபவமுள்ள சில பெரியோர்களே கோயில் திருமொழியைப் பற்றியும், அதை ஸேவிக்கும் முறை பற்றியும் அறிந்திருக்கிறார்கள் என்பதை ஸ்ரீவைஷ்ணவ உலகம் நன்கு அறியும்.

அருளிச்செயல்களை ஸேவிப்பதில் பல முறைகள் உண்டு. அத்தனை முறைகளும் தொன்றுதொட்டு நம் பெரியோர்களால் அநுஷ்டித்துக் காட்டப்பட்டவையேயாகும். ஸன்னிதிகளில் மஹோத்ஸவ காலங்களிலும் மடங்கள், திருமாளிகைகள் ஆகியவற்றில் சில விசேஷ காலங்களிலும், திருப்பல்லாண்டு தொடங்கி எல்லாப் பாசுரங்களும் விஸ்தாரமாகவும் நிதானமாகவும் ஸேவிக்கப்படுகின்றன. முன்னடி-பின்னடி ஸேவிக்கும் கிரமும் வெகு நாட்களாகவே நடைமுறையில் இருந்து வருகிறது. அனத்யயன காலங்களில் அந்தந்த திவ்யப் பிரபந்த தனியன்களை மட்டும் முறையாக ஸேவித்து உபதேசரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதிகளை ஸேவிப்பார்கள். ஸன்னிதிகளில் நித்யாநுஸந்-தான க்ரமத்தில் அவகாசத்திற்கு ஏற்றவாறு சில பதிகங்களோடு அந்தந்தத் திவ்யதேசப் பாசுரங்களையும் சேர்த்து ஸேவிப்பதுண்டு காஞ்சீபுரத்தில் யதோக்தகாரி ஸன்னிதியில் அந்த எம்பெருமானைப் பற்றிய பாசுரங்களையெல்லாம் சேர்த்து 'திருவெஃகாமாலை' என்ற பெயரில் நித்யாநுஸந்தான ஸேவையின்போது ஸேவிக்கிறார்கள். இந்த முறைகளெல்லாம் இன்று-நேற்று ஏற்பட்டவையல்ல; பல்லாண்டுகளாக நடைபெற்று வருவனவாகும். திருவாய்-மொழியிலிருந்து சிலபதிகங்களை ஒன்றாகச் சேர்த்துக் கோயில் திருவாய்மொழி என்று பல இடங்களில் ஸேவிக்கப்படுகிறது. இது போல் 'கோயில் திருமொழி' ஸேவையும் நடப்பதுண்டு. இப்பெயர்களைக்காணும்போது, கோயில் என்று சொல்லப்படும் திருவரங்கத்திலேயே இந்தக்கிரமங்கள் முதன்முதலில் ஏற்பட்டதாக ஊஹித்துக்கொள்ள முடிகிறது.

பதின்மர் பாடிய பெருமாள் என்று பெரும்புகழ்பெற்ற நம் பெருமாள், அருளிச்செயலைத் திருச்செவி சாத்தாத நாளே

கிடையாது, மாறுபட்ட கருத்தினைக் கொண்ட பலரால் ஆளப் பட்ட நம் நாட்டில் ஒரோ கால விசேஷங்களில் அர்ச்சாவதார எம்பெருமான்களுக்கும் சில அபாயங்கள் ஏற்பட்டிருந்தன. கிணற் றடியில் விளையாடும் குழந்தையைத் தாய் இமை கொட்டாமல் கவனித்துக் காத்து வருவது போல் நம் முன்னோர்கள், உண்ணாது உறங்காது அர்ச்சாவதார எம்பெருமான்களையும் கவனித்து ரக்ஷக மாகப் பல்லாண்டு பாடி வந்திருக்கிறார்கள். கலாபகாலங்களில் திருவரங்கத்தில் பெரியபெருமாள் ஏகாந்தமாக எழுந்தருளி இருக்கும் இருப்பில் (பெரிய திருமொழி முழுதும் திருச் செவி சாற்ற வேண்டிய ஸந்தர்பங்களில் அருளிச்செயல் அமுதூட்டும் அரையர் ஸ்வாமிகள் தனிமையில் எழுந்தருளி கைகளையே தாளமாகக் கொண்டு பெரிய திருமொழியிலிருந்து ஸங்கிரகமாக சில பதிகங்கள் இசையுடன் அநுஸந்திப்பார்களாம். அவையே ஒன்று சேர்ந்துக் கோயில் திருமொழி என்று பெயர் பெற்றது எனச் செவி வழியாக அறியப்படும் உண்மையாகும், சில காலங் களில் பல இடங்களில் கோயில் திருமொழி ஸேவிப்பதையும் காண்கிறோம்.

கோயில் திருவாய்மொழியைப் போல் கோயில் திருமொழி யையும் அனைவரும் அறிந்திருப்பது சிறப்புடையது, என்பது ஸ்ரீருக்மிணீ ஸமேதனான பார்த்தசாரதியின் திவ்ய ஸங்கல்பம் போலும்! அடியேன் எழுதிய சிறு நூல்கள் பலவற்றை வாசித்து உளமார ஆசி கூறும் அன்பர்கள் எளிய உரையொன்றெழுதி இதை வெளியிடவேண்டும் என்று கூறி அடியேனுக்கு ஆர்வ மூட்டினார்கள். முன்னோர்களின் வழியைப் பின்பற்றியே கோயில் திருமொழிப் பாசுரங்களுக்குச் சுருக்கமாகவும் எளிமையாகவும் உரை எழுதப்பட்டுள்ளது. எல்லோருக்கும் பொதுவான முறையில் கோயில் திருமொழி அமைந்திருந்தாலும் ஸேவா காலத்தின்போது பெரியோர்கள் தங்கள் திவ்யதேசப் பதிகங்களை யும் சேர்த்துக் கொள்கிறார்கள். இந்தப் புத்தகத்தில் அந்தந்த திருமொழிகளுக்கு (பதிகங்களுக்கு) முன்பு அவற்றுக்கு உரிய எம்பெருமான்களின் திருவுருவப்படங்கள் சேர்க்கப்பட்டுள்ளன. எல்லாவற்றுக்கும் மேலாக பெரிய திருமொழிப்பாசுரங்கள் முழுவதற்கும் முன்னடி - பின்னடிகள், சேர்க்கப்பட்டுள்ளன சிறிய ஞானத்தனாகிய அடியேனைக் கொண்டு எம்பெருமான் இந் நூலை வெளியிட்டிருப்பதோடு ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் அருளிச் செயலில் ஈடுபாடு கொண்ட தமிழறிஞர்களுக்கும், எந்நாளும் சுவைக்கும் கோதிலின்கனியாகவும் இதனை அமைத்துள்ளான்.

'பரகாலன் பனுவல்' என்று பெயர் தாங்கி வரும் இந்நூல் திருவேங்கடமுடையான் திருவருளாலும், திருமலை தேவஸ்தானத்தின் பேருதவியாலும் அன்பர்களின் ஆதரவினுலும் வெளிவருகிறது, ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசாரியரான திருமலை திருப்பதி ஜீயர் ஸ்வாமி மங்களாசாஸனம் அனுப்பி இருக்கிருர்.

அடியேனிடம் பேரன்பு கொண்ட ஸ்ரீ உ. வே. தி. அ. கிருஷ்ணமாசாரியார் ஸ்வாமி இந்நூலைக் கடாக்ஷித்து அச்சுப்பிழைகளையும் நீக்கி அணிந்துரை வழங்கி அநுக்ரஹித்திருக்கிருர். பிழை திருத்தமும் சேர்க்கப்பட்டுள்ளது. ஸ்ரீ, உ. வே. டாக்டர் M. A. வேங்கடகிருஷ்ணன், டாக்டர். V. V. ராமாநுஜாசாரியார் டாக்டர் வரதராஜன் (திருப்பதி) ஸ்ரீமான் A. V. கன்னையநாயுடு ஆகியோர் இந்நூல் வெளிவர உதவியுள்ளார்கள். இவர்களுக்கு அடியேனுடைய க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயபத்திரிகைகளை அச்சிடுவதில் இடைவிடாமல் தொடர்பு கொண்டிருப்பவரும், பார்த்தசாரதி பக்தருமான, குரு பிரஸின் உரிமையாளர் இ. வ. கிருஷ்ணன் அவர்கள் இந்நூலை அச்சிட்டுக் கொடுத்துள்ளார்கள். இவருக்கு எனது நன்றி.

'பரகாலன் பனுவல்' என்ற இந்நூல், அடியேனுடைய திருத்தகப்பனுர் பெருமாள்கோயில் யதீந்த்ரப்ரவண ப்ரபாவம் பிள்ளைலோகம் திருவேங்கடாச்சாரியார் ஸ்வாமியின் நூற்றுண்டு விழாவின் நினைவாக திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தசாரதி எம்பெருமான் திருவடி வாரத்தில் வெளியிடப்படுகிறது

**வித்வான் நியாய சிரோமணி**
**யதீந்த்ரப்ரவண ப்ரபாவம்**
**பிள்ளைலோகம்**
**ஸ்தலசயன தாஸன்**



திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி.

ஸ்ரீ :

ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

## தனியன்கள்

ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணர்ணவம் |
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம் ||

(கூரத்தாழ்வான் அருளியது)

லக்ஷ்மீ நாத ஸமாரம்பாம் நாத யாமுந மத்யமாம் |
அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம் ||
யோ நித்ய மச்யுத பதாம்புஜ யுக்மருக்ம
வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே |
அஸ்மத் குரோர் பகவதோஸ்ய தயைக ஸிந்தோ :
ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே

(ஆளவந்தார் அருளிச்செய்தது)

மாதா பிதா யுவதய ஸ்தநயா விபூதி :
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம் |
ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத்ததங்க்ரி யுகளம் ப்ரணமாமி மூர்த்நா ||

(பராசரபட்டர் அருளிச் செய்தது)

பூதம் ஸரஸ்ச மஹதாஹ்வய பட்டநாத
ஸ்ரீபக்திஸார குலசேகரயோகி வாஹாந் |
பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ர மிச்ராந்
ஸ்ரீமத்பராங்குச முநிம் ப்ரணதோஸ்மி நித்யம் ||

(திருக்கோட்டியூர் நம்பி அருளியது)

கலயாமி கலித்வம்ஸம் கவிம் லோக திவாகரம் |
யஸ்யகோபி : ப்ரகாசாபி ராவித்யம் நிஹதம் தம : ||

(எம்பெருமானார் அருளிச் செய்தது)

வாழி பரகாலன் வாழி கலிகன்றி
வாழி குறையலூர் வாழ்வேந்தன் - வாழியரோ.
மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன்.
தூயோன் சுடர் மானவேல்.

(ஆழ்வான் அருளியது)

நெஞ்சுக்கிருள் கடிதீபம் அடங்கா நெடும்பிறவி
நஞ்சுக்கு நல்லவமுதம், தமிழ் நன்னூல் துறைகள்
அஞ்சுக் கிலக்கியம் ஆரணசாரம், பரசமயப்
பஞ்சுக் கனலின் பொறி, பரகாலன் பனுவல்களே.

(எம்பார் அருளியது)

எங்கள் கதியே! இராமாநுசமுனியே!
சங்கை கெடுத்தாண்ட தவராசா!—பொங்குபுகழ்
மங்கையர் கோனீந்த மறையாயிரமனைத்தும்
தங்குமனம் நீ யெனக்குத்தா!

*[மாலைத்தனியே வழிபறிக்க வேணுமென்று
கோலிப்பதிவிருந்த கொற்றவனே! — வேலை
அணைத்தருளும் கையாலடியேன் வினையை
துணித்தருள வேணும் துணிந்து.]

ஃ ஃ ஃ

# பரகாலன் பனுவல்.

(பெரிய திருமொழி)

## மூன்றாம்பத்து-முதல் திருமொழி.

'வாடினேன் வாடி'

'வெகுநாட்களாகப் பகவானை மறந்து சிற்றின்பங்களில் ஆசை கொண்டு இளம்பெண்கள் கலவியே கருதி ஓடினேன். இவ்வாறே பழுதே பல பகலும் போயின ஆயினும் எம்பெருமானின் இயல்பான திருவருளால் (நிர்ஹேதுகமான கிருபையால்) அவனிடமிருந்தே அஷ்டாக்ஷர மஹாமந்திரத்தை உபதேசமாகப் பெற்றேன். ஜீவாத்ம பரமாத்ம ஸ்வரூபத்தை உணர்ந்து திருந்தினேன், என்று திருமங்கையாழ்வார் கூறித் திருமந்திரத்தில் சிறப்பை விளக்கிச் சொல்லுகிறார். இத்திருமொழியில், தான் பெற்ற பேற்றினை எல்லோரும் பெற வேண்டும் என்றும் விரும்புகிறார்.

*வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்
    பெருந்துய ரிடும்பையில் பிறந்து.
கூடினேன் கூடி இளையவர் தம்மோடு
    அவர் தரும் கலவியே கருதி
ஓடினேனோடி உய்வதோர் பொருளால்
    உணர்வெனும் பெரும் பதம் திரிந்து
நாடினேன் நாடி நான் கண்டுகொண்டேன்
    நாராயணா வென்னும் நாமம். (1)

கீழே சென்ற காலமெல்லாம் வாடிக் கிடந்தேன். அதனால் மன வருத்தமடைந்தேன். அளவற்ற துன்பம் நிறைந்த ஸம்ஸாரத்திலே பிறந்து அதிலேயே ஊறினேன். பெண்கள் தரும் இன்பமே பேரின்பம் எனக்கருதி அறியாமை மிகுதியால் அவர்களையே நாடி ஓடினேன். என்னைத் திருத்த எண்ணிய எம்பெருமானின் திருவருளால் ஞான வழியில் (என்னையும் அறியாமல்) அடி எடுத்து வைத்தேன். நன்மை தீமைகளை ஆராயத் தொடங்கினேன். திருவஷ்டாக்ஷர மஹாமந்திரத்தைப் பெற்றேன்.

*திருமந்திரத்திலுள்ள நாராயணாய என்கிற சொல்லே கடைக் குறையாக 'நாராயண' என்று ஆயிற்று எனப் பெரியோர்கள் கூறுவார்கள்.

**ஆவியே! அமுதே! என நினைந்துருகி**
**அவரவர் பணை முலை துணையா**
**பாவியேனுணரா தெத்தனை பகலும்**
**பழுது போயொழிந்தன நாள்கள்**
**தூவி சேரன்னம் துணையொடும் புணரும்**
**சூழ் புனற் குடந்தையே தொழுது, என்**
**நாவினாலுய்ய நான் கண்டுகொண்டேன்**
**நாராயணா வென்னும் நாமம்.** (2)

என் உயிர் போன்றவளே! அமுதம் போன்று இனியவளே! என்று வாய் பிதற்றிக்கொண்டு, சிற்றின்பத்திலேயே நோக்குடைய பாவியாகிய நான், பெண்களின் மார்பகங்களையே துணையாக நினைத்து வீணாகக் காலத்தைக் கழித்தேன். இப்படியே பல நாட்கள் சென்றன. அன்னப்பறவைகள் பெடையோடு புணரும் இடமாயும் நீர்வளம் மிக்க இடமாயும் உள்ள திருக்குடந்தையை ஸேவித்து உய்வு பெறும்படியாக அஷ்டாக்ஷர மஹாமந்திரத்தை என் நாவினால் சொல்லப் பெற்றேன்.

*திருக்குடந்தையில் பெருமாளும் பிராட்டியும் சேர்ந்து நிலையாக வாழ்வதையே ஆழ்வார் 'அன்னம் துணையோடு புணரும் குடந்தை' என்று கூறினார் என்பது பெரியோர்களின் துணிபு.

**சேமமே வேண்டித் தீவினை பெருக்கித்**
**தெரிவைமார் உருவமே மருவி**
**ஊமனார் கண்ட கனவிலும் பழுதாய்**
**ஒழிந்தன கழிந்த அந்நாள்கள்**
**காமனார் தாதை நம்முடை யடிகள்**
**தம்மடைந்தார் மனத்திருப்பார்**
**நாமம் நானுய்ய நான் கண்டுகொண்டேன்**
**நாராயணா வென்னும் நாமம்.** (3)

நன்மையையே விரும்பி இருந்தும், இதனைப் பெற நல்வினையைச் செய்யாமல், தீவினைகளையே செய்து, பெண்களின் வடிவழகையே நாடி, கீழே சென்ற நாட்களெல்லாம், ஊமை கண்ட கனவை விட வீணாகக் கழிந்தன. காமனுக்குத் தந்தையும் நமக்குத் தலைவரும், நினைப்பவரின் உள்ளத்தை விட்டு நீங்காதவருமான எம்பெருமானின் திருநாமமாகிய திருமந்திரத்தை (அஷ்டாக்ஷர மஹாமந்திரத்தை) நான் உய்யக்கண்டு கொண்டேன்

* மன்மதனே ப்ரத்யும்னனுகப் பிறந்தான். பிரத்யும்னன் கண்ணனின் திருக்குமாரன். அதனுல் எம்பெருமான் காமனுர் தாதையாக (மன்மதனுக்குத் தந்தையாக) ஆனுன்.

**வென்றியே வேண்டி வீழ்பொருட் கிரங்கி**
**வேற்கணுர் கலவியே கருதி**
**நின்றவா நில்லா நெஞ்சினை யுடையேன்**
**என் செய்கேன்? நெடுவிசும்பணவும்**
**பன்றியாயன்று பாரகங்கீண்ட**
**பாழியானுழியானருளே***
**நன்று நானுய்ய நான் கண்டுகொண்டேன்**
**நாராயணு வென்னும்நாமம்.** (4)

வெற்றியையே விரும்பியும், அழியும் பொருளுக்காக மனம் கரைந்தும், வேல் போன்ற கண்களையுடைய மாதர்களின் கலவியை ஆசைப்பட்டும், ஒன்றிலும் நிலைத்து நில்லாமல் (சபலமாய்த்) திரியும் நெஞ்சையுடையவனுன நான் என் செய்வது? எப்படி உஜ்ஜீவிப்பது? என்று தடுமாறிக்கொண்டிருந்தபோது, திருவாழி யைக் கையில் கொண்டவனும் மிடுக்குடையவனுவான (பூவராகனின்) வராஹ நாயனுரின் திருவருளால் நான் உய்யும்படி 'நாராயணு' என்ற திருநாமத்தைக் கண்டுகொண்டேன்.

*ஏனத்தினுருவாய எம்பெருமானே ஞானப்பிரான்.

**கள்வனேனுனேன் படிறு செய்திருப்பேன்**
**கண்டவா திரிதந்தேனேலும்**
**தெள்ளியேனுனேன் செல்கதிக்கமைந்தேன்**
**சிக்கெனத் திருவருள் பெற்றேன்**
**உள்ளெலாமுருகிக் குரல் தழுத் தொழிந்தேன்**
**உடம்பெலாம் கண்ணநீர் சோர**
**நள்ளிருளளவும் பகலும் நானழைப்பன்**
**நாராயணு வென்னும் நாமம்.** (5)

பகவானுக்கே உரிய ஆத்மாவைக் களவாடி என்னுடையதாக உரிமையாக்கிக் கொண்டு பற்பல தீமைகள் செய்து மனம் போன படியெல்லாம் திரிந்துழன்றேன். ஆயினும் இன்று நான் தெளிவு பெற்றேன்; பகவானின் கிருபையையும் உறுதியாகப பெற்றேன். போக வேண்டிய நல்வழிக்கு ஆளானேன் (பரமபதத்தை அடை தற்குரிய தகுதியைப் பெற்றேன்.) உள்ளம் உருகுகிறது. குரலோ தழுதழுக்கிறது, ஆனந்தக் கண்ணீர் உடம்பை நனைக்கிறது. இரவும் பகலும் 'நாராயணு' என்றே கதறுகிறேன்.

* இந்த ஜீவாத்மா பரமாத்மாவைச் சேர்ந்தது. (மம) என்னுடையது என்பது நீங்கித் (நவ) என்னும் நிலை ஏற்படுவதே ஆத்மஞானம் பெற்றதற்கு அடையாளமாகும்.

*எம்பிரா னெந்தை என்னுடைச் சுற்றம்
எனக்கரசு என்னுடை வாணாள்
அம்பினலரக்கர் வெருக்கொள நெருக்கி
அவருயிர் செகுத்த எம் அண்ணல்
வம்புலாம் சோலை மாமதிள், தஞ்சை
மாமணிக் கோயிலே வணங்கி
நம்பிகாள்! உய்ய நான் கண்டு கொண்டேன்
நாராயணா வென்னும் நாமம் (6)

ஸ்ரீமந் நாராயணனையே முக்காலும் அநுபவித்துப் பொழுது போக்கும் பாகவத ச்ரேஷ்டர்களே! (சிறந்த அடியார்களே) எனக்குப் பல உதவிகளைச் செய்தவனும், எனக்குத் தந்தையும் எல்லா உறவும், விரோதிகளைப் போக்கி என்னை ஆண்டவனும், எனக்கு உயிரும், கூரிய அம்புகளினால் அரக்கர்களைப் பயமுறுத்தித் தகர்த்து அழித்தவனும் எம் அண்ணலுமாகிய எம்பெருமான் எழுந்தருளியுள்ள, சோலைகளையும் பெரிய மதிள்களையுமுடைய தஞ்சை மாமணிக் கோவிலையே வணங்கிப் பேறு (பயன்) பெறும் படியாகத் திருமந்திரமாகிற 'நாராயணா' என்ற திருநாமத்தைக் கண்டுகொண்டேன்.

* தஞ்சை மாமணிக்கோயில் என்பதே இப்போது தஞ்சாவூர் என்று கூறப்படுகிறது.

இற்பிறப்பறியீர்! இவரவரென்னீர்
இன்னதோர் தன்மையென்றுணரீர்
கற்பகம் புலவர் களைகணென்றுலகில்
கண்டவா தொண்டரைப்பாடும்
சொற்பொருளாளீர் சொல்லுகேன் வம்மின்
சூழ்புனற் குடந்தையே தொழுமின்
நற்பொருள் காண்மின் பாடி நீருய்ம்மின்.
நாராயணா வென்னும் நாமம். (7)

இல்வாழ்க்கையைச் சரியான முறையில் நடத்தும் வழியை அறியாதரவர்களும், தன் குடிப்பிறப்பையே அறியாதவர்களும், முன்பு இருந்த ஏழ்மை நிலையை அறிந்துகொள்ளாமல் செல்வத்தில் புரளுகிறவர்களையும், இழிதொழிலேயே செய்து பிழைக்கிறவர்களுமான உபயோகமற்றவர்களை எல்லாம், 'கற்பக மரமே! முற்றும் உணர்ந்தவரே! எங்கள் தலைவரே' என்றெல்லாம் மனம்

போனபடி போற்றி இன்கவி பாடும் கவிஞர்களே! ஒன்று சொல்லு கிறேன் கேளுங்கள். அவர்களைக் கவி பாடுவதை விடுத்து இங்கே வாருங்கள்! நீர்வளம் நிறைந்த திருக்குடந்தையை வணங்குங்கள்; 'நாராயணா' என்று சொல்லி உய்வு பெறுங்கள்! இவையே நான் உங்களுக்குச் செய்யும் உபதேசங்களாகும்.

* 'நாராயணா' என்னு நா என்ன நாவே !

**கற்றிலேன் கலைகள் ஐம்புலன் கருதும்**
**கருத்துளே திருத்தினேன் மனத்தைப்**
**பெற்றிலேன் அதனால் பேதையேன் நன்மை**
**பெருநிலத்தாருயிர்க் கெல்லாம்**
**செற்றமே வேண்டித் திரிதருவேன் தவிர்ந்தேன்**
**செல்கதிக் குய்யுமா றெண்ணி**
**நற்றுணையாகப் பற்றினேன் அடியேன்**
**நாராயணா வென்னும் நாமம்.** **(8)**

நான் சாஸ்திர ஞானமும் பெற்றவன் அல்லேன்; ஐம்புலன் களும் விரும்பும் இடமெல்லாம் நெஞ்சினைச் செலுத்திக் கிடந்தேன். இவ்வாறு அறிவுகெட்டவனாக இருந்தமையால் ஒரு நன்மையும் பெறாதவனாயினேன் உலகிலுள்ள உயிரினங்களுக்கெல்லாம் தீமை செய்வதையே பொழுதுபோக்காகக் கொண்டு திரிந்தேன் நேற்று வரை இவ்வாறெல்லாம் இருந்தேன். பகவத் கிருபையினால் திடீரென்று என் நிலை மாறியது; கொடுமைகள் செய்வதைத் தவிர்ந்தேன். நல் வீடு பெறுதற்குரிய நல்வழியைச் சிந்தித்து, அடைவதற்காக (அஷ்டாக்ஷர மஹாமந்திரத்தை) 'நாராயணா' என்ற திருநாமத்தைத் துணையாகக் கொண்டேன்.

* ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு அஷ்டாக்ஷர மந்திரமே பெருந்துணை

***குலம் தரும் செல்வம் தந்திடும்**
**அடியார் படுதுய ராயின வெல்லாம்**
**நிலம் தரம் செய்யும் நீள்விசும்பருளும்**
**அருளொடு பெருநிலமளிக்கும்**
**வலந்தரும் மற்றும் தந்திடும்**
**பெற்ற தாயினுமாயின செய்யும்**
**நலம் தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன்**
**நாராயணா வென்னும் நாமம்.** **(9)**

'நாராயணா' என்னும் திருநாமம் உயர்ந்த குலத்தைத் தரும்; சிறந்த ஐஸ்வரியத்தைக் கொடுக்கும். (ஸ்ரீவைஷ்ணவ லக்ஷ்மியைத் தரும்) துயர் என்று பெயர் பெற்ற எல்லாவற்றையும் தரை

மட்டமாக்கி விடும்; பெருவீடு (பரமபதத்தைக்) கொடுக்கும் பகவானின் கிருபையையும் அவனுக்குச் செய்யும்படியான கைங்கரியத்தையும் தரும் பகவானை அனுபவிப்பதற்குரிய வலிமை யையும் கொடுக்கும் மேலும் பல நன்மைகளையும் தரும் பெற்ற தாய் செய்யும் நன்மைகளைக் காட்டிலும், பல நன்மைகளைச் செய்யும். பல நன்மைகளைத் தருகின்ற இப்படிப்பட்ட திருநாமத்தை அடியேன் கிடைக்கப்பெற்றேன்.

* 'நாராயணா' என்ற சொல் ஒன்றே நலம் தரும் சொல்லாம்.

"மஞ்சுலாஞ்சோலை வண்டறை மாநீர்
மங்கையார் வாட் கலிகன்றி
செஞ் சொலாலெடுத்த தெய்வநன் மாலை
இவை கொண்டு சிக்கெனத் தொண்டீர்!
துஞ்சும்போ தழைமின் துயர்வரில் நினைமின்
துயரிலீர் சொல்லிலும் நன்றாம்
நஞ்சுதான் கண்டீர் நம் முடை வினைக்கு
'நாராயணா' வென்னும் நாமம். (10)

மேகங்கள் உலாவும் சோலைகளையும், வண்டுகள் ஒலி செய்யும் நீர்வளம் நிலவளங்களையும் கொண்ட திருமங்கை நன்னாட்டுத் தலைவரும், ஒளிவீசும் வாளைக் கையில் கொண்டவருமான திருமங்கையாழ்வார் அருளிய இச் சொல்மாலையை நாவினில் கொண்டு, தொண்டர்களே! துன்பமில்லாத காலத்தும், துயருற்ற காலத்தும், வாழ்நாள் முடியும் காலத்தும் (எப்போதும்) நாராயணா' என்று சொல்லுங்கள். அழிக்கும் ஆற்றலுடைய விஷம்போல் இருந்து கொண்டு நம்முடைய பாவங்களையெல்லாம் அழித்து ஒழிக்கும்,

* 'திருமந்திரத்தையே உறுதியுடன் சொல்லுங்கள்' என்று திருமங்கையாழ்வார் அன்பர்களுக்கு உபதேசிக்கிறார்.

'இது திருநாமப் பாட்டிறே' என்றனர் பெரியோர்.

அடிவரவு : வாடினேன் ஆவியே சேமமே வென்றியே கள்வனேன் எம்பிரான் இற்பிறப்பு கற்றிலேன் குலம் மஞ்சு வாலி.

## முதற்பத்து—ஒன்பதாம் திருமொழி.
### தாயே தந்தை.

[திருவேங்கடமுடையானே! இத்தனை ஆண்டுகளாகப் பல வகையான பாவங்களைச் செய்து காலத்தைக் கழித்தேன் உறவின ராக இல்லாதவரை உறவினராக எண்ணினேன். போக்யமாக இல்லாதவற்றைப் போக்யமாகக் கொண்டேன்; பல உயிர்களுக்குத் துன்பம்அளித்தேன்; ஒருபோதும் மன்னிக்க முடியாத (தீமைகளைச் செய்தேன்) தீவினைகளைச் செய்துள்ளேன் இப்போது உன்னிடம் பேரன்பு கொண்டு வந்திருக்கிறேன். நீ அனைவரையும் காப்பவன்; என்குற்றத்தைக் கண்டு என்னை விட்டிடாதே வேறு கதியின்றி உன்னையே நம்பி வந்திருக்கிறேன். என் குற்றங்களைப் பொறுத்து என்னை ஆட்கொள்ள வேண்டும். மாயவனே! எங்கள் மாதவனே! உன்னைச் சரணடைகிறேன், என்று திருமங்கையாழ்வார் கூறிக் கொண்டே திருவேங்கடமுடையானைச் சரணடைகிறார்.

*** தாயே தந்தையென்றும் தாரமே கிளைமக்களென்றும்,**
**நோயே பட்டொழிந்தேன் உன்னைக் காண்பதோராசையினால்**
**வேயேய் பூம்பொழில் சூழ் விரையார் திருவேங்கடவா!**
**நாயேன் வந்தடைந்தேன் நல்கியாளென்னைக் கொண்டருளே 1.**

திருவேங்கடமுடையானே! உன்னையே எல்லா உறவினர் களுமாக நினைத்து உன்னருளைப் பெற்றே வாழவேண்டியது கடமை; அவ்வாறிருக்க எதையும் செய்யவல்லவனான (ஸர்வ ஸக்தனான) உன்னை மறந்து, அசக்தர்களான (சக்தியற்றவர்களான) உறவினர்களை தாய், தந்தை, மனைவி, மக்கள், சுற்றம் என்று நம்பி வாழ்ந்தேன். இப்போது உன் பெருமை அறிந்து உன் அருள் நோக்கி உன்திருவடிகளில் வேரற்றமரம் போல் விழுந்து வணங்கு கின்றேன். செயலால் தாழ்நிலை அடைந்திருக்கும் அடியேனை ஆட் கொள்ளவேணும்.

* மூங்கில் போல் வெறிதே ஓங்கி அழகுக்காக வளர்ந்து விடாமல், மலர் போல் மணம்வீசி வாழவேண்டும் என்பதையே 'வேயேய் பூம்பொழில்' என்ற சொற்றொடர் உணர்த்துகிறது.

**மானேய் கண்மடவார் மயக்கில் பட்டு மாநிலத்து**
**நானே நானாவித நரகம் புகும் பாவம் செய்தேன்**
**தேனேய் பூம்பொழில் சூழ் திருவேங்கடமாமலை—என்**
**ஆனாய் வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே. 2.**

தேனுண்ணும் வண்டுகள் மொய்க்கும் பூஞ்சோலைகளைக் கொண்ட திருமலையில் வாழும் யானை போன்ற பெருமானே!

அழகுமிக்க பெண்களின் கண்ணழகிலே மனத்தைப் பறிகொடுத்தேன்; அவர்களையே பின் தொடர்ந்தேன்; அவர்கள் மகிழ்வதற்காக எல்லாவகையான பாவங்களையும் செய்திருக்கிறேன். நான் செய்த பாவங்களுக்குப் பல புதிய நரகங்களையும் படைக்க வேண்டி இருக்கும்! உன்னைச் சரணடைகிறேன்; குற்றம் காணுது அடியேனை ஆட்கொள்ள வேண்டும்.

* தண்டனையிலிருந்து தப்ப முடியாத பாவங்களைச் செய்தாலும் திருமலைக்குச் சென்று திருவேங்கடவனை வணங்கினுல் அவனருள் நோக்கால் அத்தனை பாவங்களும் அழிந்து போகும்.

**கொன்றேன் பல்லுயிரைக் குறிக்கோளொன்றிலாமையினுல்**
**என்றேனுமிரந்தார்க்கு இனிதாக வுரைத்தறியேன்**
**குன்றேய் மேகமதிர் குளிர் மாமலை வேங்கடவா!**
**அன்றே வந்தடைந்தேனை அடியேனை ஆட்கொண்டருளே. 3.**

திருவேங்கடவா! எனக்கென்று ஒரு குறிக்கோள் இல்லை; எதிலும் நம்பிக்கையும் இல்லை; புண்யபாபங்களை நம்பியதில்லை; சுவர்க்க நரகங்களை நம்பியதில்லை; சாத்திரங்களையும் நம்பியது இல்லை. பல உயிர்களைக் கொன்றிருக்கிறேன், கொலை செய்வதையே கடமை என்று நினைத்து விட்டேன்; என்னை நாடி வந்தவர்க்கு ஒரு பிடி உணவும் இட்டதில்லை; வந்தவர் மனம் புண்படும்படியாகவும் பேசி அனுப்பி இருக்கிறேன். இதைவிட வேறு பாவம் என்ன இருக்கிறது? இப்படிப்பட்டவனுன அடியேன் சரணடைந்து விட்டேன்; ஆட்கொண்டு அருளவேணும்.

* கருமேகங்கள் திருவேங்கட மலையையே மறைத்துக்கொண்டு முழங்கினுலும் திருவேங்கடமலையை என்ன செய்ய முடியும்? பாவங்கள் நம்மைச் சூழ்ந்து அச்சுறுத்தினுலும் வேங்கடவனைச் சரண்பற்றிய நம்மை என்ன செய்ய முடியும்?

**குலந்தானெத்தனையும் பிறந்தே யிறந்தெய்த் தொழிந்தேன்**
**நலந்தானென்றுமிலேன் நல்லதோரறம் செய்துமிலேன்**
**நிலந்தோய் நீள்முகில் சேர் நெறியார் திருவேங்கடவா!**
**அலந்தேன் வந்தடைந்தேன் அடியேனையாட்கொண்டருளே. 4.**

திருவேங்கடவா! எல்லாக் குலங்களிலும் பிறந்தேன். எத்தனை பிறவி உண்டோ, அத்தனைப்பிறவியும் பெற்றேன். பிறப்பதும் இறப்பதுமாக இருந்தேனேயொழிய அவற்றில் எந்தப்பிறவியி-



திருமலை (திருவேங்கடமுடையான்) உத்ஸவர்.



வேடார் திருவேங்கடம் மேயவிளக்கு திருவெள்ளக்குளம் ஸ்ரீ அண்ணன் பெருமாள்

வேனும் நல்லதைச் செய்ததுண்டா? செய்யவும் நினைத்தது உண்டா? எது நல்ல செயல் என்றே எனக்குத் தெரியாதே! அதனாலன்றோ துன்பமடைந்தேன்; இனி பாவத்தைச் செய்வதற்கும் வலிமையற்றவனாக இருக்கிறேன். உன் திருவடிகளையே நாடி வந்துள்ளேன். அடியேனை ஆட்கொள்ள வேண்டும்.

* ஒருவர் ஞானக்கடலாக இருந்தாலும் (உத்தமாதிகாரியாக இருந்தாலும்) பகவானைச் சரணடையும்போது, தன்னிடம் எத்தகைய நன்மையும் இல்லை என்று தாழ்த்திக் கூறிக் கொள்ள வேண்டுவதை இப்பாசுரம் உணர்த்துகிறது.

**எப்பாவம் பலவும் இவையே செய்து இளைத்தொழிந்தேன்**
**துப்பா! நின்னடியே தொடர்ந்தேத்தவும் கிற்கின்றிலேன்**
**செப்பார் திண்வரை சூழ் திருவேங்கட மாமலை என்**
**அப்பா! வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே.** (5)

எந்தையே! திருவேங்கடமலை நாதனே! சிறிதும் சிந்திக்காமல் பலவகையான பாவங்களை ஓயாமல் செய்து விட்டேன். இப்போது அவை தரும் பயன்களை நினைத்து வருந்துகிறேன். வலிமை இழந்து மிகவும் குன்றிப் போனேன். 'எம்பெருமானே! என் அப்பா' என்றும் உன்னை அழைத்துத் துதிக்கவும் முடியாதவனாக இருக்கிறேனே! எல்லா வகையிலும் அசக்தனான அடியேனை ஆட்கொண்டு அருள வேண்டும்.

* சிறிதும் ஒளிவுமறைவு இன்றி நம்முடைய அசக்தியை வெளிப்படுத்தும்போது தான் பகவானின் அருள் உள்ளம் நம்மை நோக்குகிறது.

**மண்ணாய் நீரெரிகால் மஞ்சுலாவு மாகாசமுமாம்**
**புண்ணாராக்கை தன்னுள் புலம்பித்தளர்ந்தெய்த் தொழிந்தேன்.**
**விண்ணார் நீள் சிகர விரையார் திருவேங்கடவா!**
**அண்ணா! வந்தடைந்தேன் அடியேனையாட் கொண்டருளே.** (6)

திருவேங்கடமலையில் வாழும் பெருமானே! கல்லும் மண்ணும் கொண்டு அழகியதாக வீட்டைக் கட்டினாலும் அதுவும் ஒரு காலத்தில் அழியக்கூடியதே அதைப்போன்றதே இவ்வுடலும். நிலம், நீர், தீ, கால், விசும்பு என்ற பஞ்ச பூதங்களாலாகியது. இவ்வுடல்; நிலையற்றது; நோய்களுக்கும் புண்களுக்கும் உறைவிடமாக உள்ளது. இனி இப்பிறவி வேண்டாம்; இந்த சரீரம்

வேண்டாம். இதனால் நான் துன்பமே அடைந்தேன். மறுபிறவிக்கு அஞ்சி ஓடிவந்து உன்னைச் சரணடைந்தேன். அடியேனை ஆட்கொள்ளவேண்டும்.

*பிணி பசி மூப்புத் துன்பம் நிறைந்த இப்பிறவியை நீக்கும் திறனுடையவன் பிறப்பிலியான திருவேங்கடவன் (ஸ்ரீமந் நாராயணன்) ஒருவனேயாம்.

**தெரியேன் பாலகனாய்ப் பல தீமைகள் செய்துமிட்டேன்**
**பெரியேனாயினபின் பிறர்க்கே உழைத்தேழையானேன்.**
**கரிசேர் பூம்பொழில்சூழ் கனமாமலை வேங்கடவா!**
**அரியே! வந்தடைந்தேன் அடியேனையாட் கொண்டருளே. (7)**

யானைகள் நிறைந்த திருவேங்கடமலையில் வாழும் சிங்கமே! என்னுடைய வாழ்நாட்களெல்லாம் பயனற்றுப் போயின. நன்மை, தீமைகளை அறிந்துகொள்ளும் விவேகம் இல்லாமையால் இளமையில் பல பாவங்களைச் செய்தேன். நல்ல வயதை அடைந்ததும் மாதர்களுக்காகவே (அவர்களின் மகிழ்ச்சிக்காகவே) உழைத்துக் கெட்டுப்போனேன். 'உலகில் வாழும் மீதி நாட்களையேனும் தேவரீருக்கு அடிமை செய்வதில் செலவிட வேண்டும் என்று நினைத்தே தேவரீரைச் சரணடைகிறேன்; அடியேனை ஆட்கொள்ள வேண்டும்.

*இளமையில் விவேகம் இல்லாமையால் நன்மை செய்வதில்லை; யௌவன தசையில் (வாலிபப் பருவத்தில்) காம மயக்கத்தின் வலையில் சிக்கிக் கொள்வதால் நல்லதைச் செய்வதில்லை. முதுமைப் பருவத்தில் வலிமை குறைந்துவிடுவதால் நன்மை செய்வதில்லை. இப்படிப்பட்ட நிலையில் பகவானின் அருள் ஒன்றே நமக்குத்துணை.

**நோற்றேன் பல்பிறவி உன்னைக் காண்பதோராசையினால்**
**ஏற்றேனிப்பிறப்பே இடருற்றனன் எம்பெருமான்!**
**கோல்தேன் பாய்ந்தொழுகும் குளிர்சோலைசூழ் வேங்கடவா!**
**ஆற்றேன் வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே. (8)**

தேன் வெள்ளமிடும் சோலைகள் சூழ்ந்த திருவேங்கடமலையில் வாழும் பிரானே! பல பிறவிகளை ஏற்றேன். ஒவ்வொரு பிறவியிலும் உன்னைக் காணவேண்டும் என்று எனக்குச் சிறிது சிறிதாக ஆசை ஏற்பட்டு வளர்ந்தது. இப்பிறவியில் உன்னைக் காணும் பேறு கிடைத்தது. உன்னைக் காணாதபோதெல்லாம் ஏற்படும்

துன்பத்திற்கு அஞ்சி உன்னைச் சரணடைகிறேன்; அடியேனை ஆட்கொள்ளவேண்டும்.

* பல பிறவிகளில் நல்வினை செய்திருந்தால்தான் திருவேங்கடமுடையான் ஸேவை எளிதில் கிடைக்கும்.

**பற்றேலொன்றுமிலேன பாவமே செய்து பாவியானேன்**
**மற்றேலொன்றறியேன் மாயனே! எங்கள் மாதவனே!**
**கல்தேன் பாய்ந்தொழுகும் கமலச்சுனைவேங்கடவா!**
**அற்றேன் வந்தடைந்தேன் அடியேனையாட் கொண்டருளே. (9)**

தேன் மணம் வீசும் தாமரைத்தடம் சூழ்ந்த திருமலையில் வாழும் அலர்மேல்மங்கையுறை மார்ப! உன்னைத் தவிர வேறொன்றையும் ஆதாரமகாப் பெருதவன் அடியேன். உன்னைப் பெறுவதற்கு உரிய ஞானமும் என்னிடம் இல்லை. குறைவாளரையும் காப்பாற்றும் குறைவொன்றுமில்லாத கோவிந்தன் நீ!. 'நீயே கதி' என்று உன்னைச் சரணடைந்துள்ளேன்; ஆட்கொள்ளவேணும்.

* ஞானமும் அநுட்டானமும் அவனைப் பெற உபாயங்கள் ஆகா ; அவனருளே (அவனே) அவனைப் பெறும் உபாயமாம்.

**கண்ணாயேழுலகுக்கு உயிராய வெங்கார் வண்ணனை**
**விண்ணோர்தாம் பரவும் பொழில் வேங்கட வேதியனை**
**திண்ணார் மாடங்கள் சூழ் திருமங்கையர்கோன் கலியன்**
**பண்ணார் பாடல்பத்தும் பயில்வார்க்கில்லை பாவங்களே. 10)**

திருவேங்கடமுடையான் எல்லாவுலகங்களுக்கும் கண்போன்றவன்; உயிர்போன்றவன்; வேதங்களால் அறியத்தக்கவன்; முகில் வண்ணன்; நித்ய சூரிகளால் எப்போதும் ஸேவிக்கப்படுகிறவன். அவனைக் குறித்துத் திருமங்கைமன்னன் அருளிய இப்பத்துப் பாடல்களையும் பாடினால், அவனை அடையத்தடையாக இருக்கும் பாவங்கள் அழியும்.

* இப்பத்துப்பாடல்கள் திருவேங்கடமுடையானின் அருளைப் பெற்றுத்தந்து நலமளிக்கும்

**அடிவரவு** :- தாய் மான் கொன்றேன் குலம் எப்பாவம் மண் தெரியேன் நோற்றேன் பற்றேல் கண்ணாய் கண்.

## இரண்டாம் பத்து — ஆறும் திருமொழி.

### நண்ணாதவாளவுணர்

திருமங்கையாழ்வார் 'பாராயதுண்டுமிழ்ந்த' என்ற கீழ்த்திரு மொழியில் திருக்கடல் மல்லைத் தலசயனப் பெருமாளை ஸேவித்துத் (தான்) மகிழ்ந்தமையைக் கூறியுள்ளார். பாகவதர்களுக்கு (அடியார்களுக்கு) அடிமைப்படுவது, பகவானுக்கு அடிமைப் படுவதைக் காட்டிலும் மேலானது என்ற *அரியதத்துவத்தை நினைத்துப் பாகவதோத்தமர்களிடம் தாம் பேரன்பு கொண்டிருப்பதை 'நண்ணாதவாளவுணர்' என்ற இத்திருமொழியில் வெளியிடுகிறார்.

ஆழ்வாருக்கு இப்போது திருக்கடல் மல்லையும் உத்தேச்ய மன்று; அங்கு எழுந்தருளி இருக்கும் தலசயனப்பெருமாளும் உத்தேச்யனல்லன்; ஆனால், திருக்கடல் மல்லையையும், அந்த எம் பெருமானையும் இடைவிடாமல் சிந்திக்கும் அடியார்களே (பாகவதோத்தமர்களே) உத்தேச்யர் என்பது இத்திருமொழியால் விளங்குகிறது.

பாவானிடம் தாம் கொண்டிருக்கும் பக்தி பகவத் பக்தி; பகவத் பக்தியின் எல்லை நிலம் பாதவத பக்தி (பாகவதோத்தமர் களிடம் கொள்ளும் பக்தி). ஒரு பொருள் மீது நாம் ஆசை கொண்டால் அந்த ஆசை அப்பொருளோடு தொடர்புள்ள எல்லாப் பொருள்களின் மீதும் செல்லுகிறது. ஆசாரியரிடம் நாம் பக்தி கொண்டிருப்பதால், அவருடைய பாதுகைகளைக் கண்களில் ஒற்றிக் கொள்கிறோம்; தலை மேல் வைத்துக் கொண்டு உகக்கிறோம்; அவற்றில் (ஸ்ரீபாத) தீர்த்தம் சேர்த்துக் கொள்கிறோம். அது போல், 'திருக்கடல் மல்லையையும், அங்குள்ள எம்பெருமானையும் (தலசயனத்துறைவாரையும்) பணியும் பாகவதர்களே எனக்கு உத்தேச்யர் (என் விருப்பத்திற்கும், நான் வணங்குவதற்கும் ஏற்றவர்), என்று ஆழ்வார் அருளிச் செய்கிறார். ஆழ்வார் எம் பெருமானிடம் கொண்டுள்ள பக்திப் பெருக்கையே இது விளக்கு கிறது.

**நண்ணாத வாளவுணரிடைப்புக்கு, வானவரைப்**
**பெண்ணாகி யமுதூட்டும் பெருமானார், மருவினிய**
**தண்ணார்ந்த கடல் மல்லைத் தலசயனத் துறைவாரை**
**எண்ணாதே இருப்பாரை இறைப்பொழுதும் எண்ணோமே.** (1)

மோகினி அவதாரத்தை மேற்கொண்டு தேவர்களுக்குப் பகைவர் களான அசுரர்களை வஞ்சித்துத் தேவர்களுக்கு மட்டும் அமுத

---

* கடல் மல்லை என்பதைக் கடன்மல்லை என்றும் சொல்லுவதுண்டு.

மளித்துத் திருக்கடல் மல்லையில் பளிக்துக் கொண்டிருக்கும் நம் தலைவரான தலசயனத்துறைவாரை நினையாதவர் எவரோ அவரை நாம் ஒருபோதும் நினையோம் (நினைக்கமாட்டோம்)

* அன்று வானுலகத தேவர்களுக்கு அமுதமளித்த தலசயனத் துறைவார், இன்று நிலத்தேவர்களுக்கு அருளமுதம் அளித்துக் கொண்டு இருக்கிறார்

**பார்வண்ண மடமங்கை பனிநன்மா மலர்க்கிழத்தி**
**நீர்வண்ணன் மார்வகத்தில் இருக்கையை முன் நினைந்தவனூர்**
**கார்வண்ண முதுமுந்நீர்க் கடல்மல்லைத் தலசயனம்**
**ஆரெண்ணும் நெஞ்சுடையார் அவரெம்மையாள்வாரே** (2)

நிலமடந்தை இடப்பக்கமும் மலர்மகள் திருமார்பிலும் எழுந்தருளி இருப்பதால், மிகப்பெருமை கொண்டு கடற்கரையிலுள்ள மல்லைப்பகுதியில் வாழும் தலசயனத்துறைவாரை எப்போதும் நினைப்பவர்கள் பெரும்பேறு பெற்றவர்களாவர்; அவர்களே எம்மை அடிமை கொள்ளத்தக்கவர்கள்.

* நமது குற்றங்குறைகளைக் களைத்து அச்சம் நீக்கி அருளுவதற்காகவே தலசயனத்துறைவார் திருமகள் மண்மகளாகிற இரு மடந்தையரோடு எழுந்தருளி இருக்கிறார்.

*** ஏனத்தினுருவாகி நிலமங்கை யெழில் கொண்டான்**
**வானத்திலவர் முறையால் மகிழ்ந்தேத்திவலங்கொள்ள**
**கானத்தின் கடல்மல்லைத் தலசயனத்துறைகின்ற**
**ஞானத்தினொளியுருவை நினைவாரென் நாயகரே.** (3)

வராகாவதாரத்தை மேற்கொண்டு இரணியாக்ஷனை அழித்தொழித்துப் பூமியைத் தண்ணீருக்குமேலே கொண்டுவந்து சிறிதும் அழகு குறையாதவாறு நிலைநிறுத்திய எம்பெருமானே, தேவர்கள் வந்து போற்றி எளிதில் வரம் பெறுவதற்கு ஏற்ப, காடுகள் நிறைந்த திருக்கடல் மல்லையில் ஞானப்பிரானாக எழுந்தருளி இருக்கிறார். அந்த ஞானப்பிரானை எப்போதும் சிந்திக்கும் அடியார்களே எனக்குத்தலைவர்கள்.

* தலசயனப் பெருமாளே வராகப் பெருமாள்; வராகப் பெருமாளே ஞானப்பிரான் : ஞானப்பிரானைஸேவித்தால் நல்ல ஞானம் ஏற்படும்.

*[திருக்கடல் மல்லையில் பஞ்சபாண்டவரதங்களுக்குச் செல்லும் வழியில் சிறுமலைக்குகையில் (வராகப் பெருமாள்) ஞானப்பிரான் எழுந்தருளி இருக்கிறார்].*

**விண்டாரை வென்றாவி விலங்குண்ண மெல்லியலார்**
**கொண்டாடு மல்லகலம் அழலேற வெஞ்சமத்துக்**
**கண்டாரை, கடல் மல்லைத் தலசயனத்துறைவாரைக்**
**கொண்டாடும் நெஞ்சுடையார் அவரெங்கள்குலதெய்வமே. (4)**

*இராவணன் முதலான பகைவர்களைப் போர்க்களத்தில் வென்று, அவரது உடல்களை விலங்குகள் இழுத்துத்தின்னும் படியாகச் செய்தவரும், மாதர்களைக் கொண்டாடி மகிழும் பகைவர்களின் மார்பினை நெருப்பு உண்ணும் படியாகச் செய்தவருமான எம் பெருமான், நம்முடைய அஹங்காரத்தை அழித்து நம்மை ஆட் கொள்வதற்காகத் திருக்கடல் மல்லைக்கு வந்து தரையில் படுத்தி ருக்கிறார். அவரையே புகழ்ந்து கொண்டாடும் நெஞ்சுபடைத்த அடியார்களே எங்கள் குலதெய்வம்!*

**தலசயனத் துறைவாரைக் கொண்டாடுகிறவரைக்குலதெய்வ மாகக் கருதவேண்டும்.*

**பிச்சச்சிறுபீலிச் சமண்குண்டர் முதலாயோர்**
**விச்சைக்கிறை யென்னு மவ்விறையைப் பணியாதே**
**கச்சிக்கிடந்தவனூர் கடல் மல்லைத்தலசயனம்**
**நச்சித் தொழுவாரை நச்சென்றன் நன்னெஞ்சே (5)**

*நல்ல நெஞ்சே! மயிலிறகுகளால் செய்யப்பட்ட சிறிய குடையையும், விசிறியையும் கையில் கொண்ட சமணர் முதலானோர், எல்லாம் அறிந்தவன் (ஸர்வக்ஞன்) என்று கொண்டாடும் அமணச்சாமியைப் பணியாமல், திருவெஃகா எம் பெருமானின் திவ்யதேசமாகிற திருக்கடல் மல்லையை விரும்பித் தொழுகின்ற அடியார்களை விரும்பித்தொழுவாயாக.*

**காஞ்சீ புரத்திலுள்ள சொன்ன வண்ணம் செய்தபெருமானே திருக்கடல் மல்லையில் ஸ்தலசயனப் பெருமாளாக ஸேவை ஸாதிக் கிறார்.*

**புலங்கொள் நிதிக்குவையோடு புழைக்கைம்மா களிற்றினமும்**
**நலங்கொள் நவமணிக்குவையும் சுமந்தெங்கும் நான்றொசிந்து,**
**கலங்களியங்கும் மல்லைக் கடல் மல்லைத் தலசயனம்**
**வலங்கொள் மனத்தாரவரை வலங்கொள் என்மடநெஞ்சே. (6)**

புலன்களைக் கவர்கின்ற பொற்குவியல்களையும், துதிக்கை களையுடைய பெரிய யானைக் கூட்டங்களையும், நல்ல நவரத்தினக் குவியல்களையும் தாங்கிக் கொண்டு வேகமாசச் செல்லமுடியாமல் (மிக்க சுமையால் அசைந்தசைந்து மெல்ல ஊர்ந்து செல்லும்) கப்பல்கள் எங்கும் பரவிச் செல்லும் பெருமையையுடைய கடல் மல்லையை அன்போடு வலம் செய்ய விரும்பும் அடியார்களை மட நெஞ்சே! நீ வழிபடுவாயாக.

* மாமல்லபுரம் சிறந்த துறைமுகமாக விளங்கியது' என்பதை இப்பாடல் உணர்த்துகிறது.

**பஞ்சிச் சிறு கூழை யுருவாகி மருவாத.**
**வஞ்சப் பெண் நஞ்சுண்ட அண்ணல், முன் கண்ணுறை**
**கஞ்சைக் கடந்தவனூர் கடல் மல்லைத் தலசயனம்**
**நெஞ்சில் தொழுவாரைத் தொழுவாய் என் தூய்நெஞ்சே. (7)**

பஞ்சு போன்று மிகவும் மென்மையான தலைமயிரையுடைய அசோதையைப் போல் உருவெடுத்துக் கொண்டு இரக்கமின்றி வஞ்சகத்தோடு வந்த பூதனையின் விஷத்தை அமுது செய்தவனும், முன் ஒருகால், தம்மிடம் சிறிதும் அன்பு கொள்ளாத கம்ஸனை வென்றுமுடித்தவனுமான எம்பெருமான் வாழுமிடமே திருக்கடல் மல்லை. தூய நெஞ்சே! கடல் மல்லையை நெஞ்சாரத் தொழும் சிறந்த அடியார்களையே நீ தொழுவாயாக.

* கண்ணனாக அவதரித்தவர் தலசயனப் பெருமாளேயாவார்.

**செழுநீர் மலர்க்கமலம் திரையுந்து வன்பகட்டால்.**
**உழுநீர் வயலுழவருழப் பின்முன் பிழைத்தெழுந்த.**
**கழுநீர் கடிகமழும் கடல் மல்லைத் தலசயனம்.**
**தொழுநீர் மனத்தவரைத் தொழுவாய் என் தூய்நெஞ்சே (8)**

இயற்கையாகவே வளம் மிக்க கழனிகள்! தாமரையும் செங்கழு நீரும் ஒன்றோடொன்று பிணைந்துப் பூத்திருக்கின்றன. உழவர்கள் வலிய எருதுகளைக் கட்டிக் கழனிககளில் ஏர் உழுகிறார்கள். வயல்களில் நிறைந்துள்ள நீரினைப்பிளந்து கொண்டு ஏர்கள் செல்லுகின்றன. உழவுக்குத்தப்பி எழுந்த செங்கழுநீர் நறுமணம் வீசுகிறது. இத்தகைய வளம் நிறைந்த திருக்கடல் மல்லையை வணங்கும் அடியார்களையே தூய்நெஞ்சே நீ தொழுதிடு.

* பக்திவயல் மாமல்லை ; பக்தி உழவன் தலசயனப் பெருமாள்,

**பிணங்களடு காடதனுள் நடமாடு பிஞ்ஞகனேடு.**
**இணங்கு திருச்சக்கரத் தெம் பெருமானுர்க்கிடம், விசும்பில்**
**கணங்களியங்கும் மல்லைக் கடல்மல்லைத் தலசயனம்**
**வணங்கு மனத்தாரவரை வணங்கென்றன் மடநெஞ்சே ! (9)**

பிணங்களைச் சுடுகின்ற சுடுகாட்டில் நடனமாடும் உருத்திரனேடு பொருந்தி இருப்பவனும், திருவாழியைக்கையில் அணிந்திருப்ப வனுமான தலசயனப் பெருமாள் வாழுமிடமாயும், தேவர்கள் வந்து உலாவும் பெருமையுடையதுமான திருக்கடல் மல்லையை வணங்குவதற்குரிய சிந்தைபடைத்த அடியார்களை மட நெஞ்சே! நீ வணங்கு.

* திருக்கடல் மல்லையை வணங்கவேண்டும் என்று நினைப்பதே பெரிய பாக்கியமாகும்.

*** கடிகமழு நெடுமறுகிற் கடல் மல்லைத் தலசயனத்து**
**அடிகளடியே நினையுமடியவர்கள் தம்மடியான்.**
**வடிகொள் நெடுவேல் வலவன் கலிகன்றியொலிவல்லார்**
**முடி கொள் நெடுமன்னவர் தம்முதல்வர் முதலாவாரே.**

நறுமணம் வீசும் நீண்ட வீதிகளையுடையது திருக்கடல்மல்லை. அங்கு எழுந்தருளி இருக்கும் தலசயனப் பெருமாளின் திருவடிகளையே தியானிப்பவர்கள் (சிந்திப்பவர்கள்) சிறந்த அடியார்கள்! அவர்களுக்கு அடியராக இருப்பவர் திருமங்கையாழ்வார். இவர் வேல்போர் செய்வதில் வல்லவர். இவர் அருளிய இப்பாடல்களைச் சொல்லவல்லவர் (அரசர்களுக்கும் அரசராவார்) பேரசர்களுக்கும் தலைவராவார்.

* எந்தப்பலனை விரும்பினுலும் அதைக் கொடுக்கவல்லது இப்பதிகம்.

அடிவரவு: - நண்ணாத பார் ஏனத்தின் விண்டாரை பிச்சம்புலம் பஞ்சி செழுநீர் பிணங்கள் கடிதிவளும்.



திருக்கடன்மல்லை ஸ்ரீ ஸ்தலசயனப் பெருமாள் . பூதத்தாழ்வார் (மாமல்லபுரம்)

# மூன்றும் பத்து—ஆறும் திருமொழி.

## தூவிரிய மலருழக்கி.

வந்துனதடியேன் என்ற திருமொழிபோல் இத்திருமொழியும் வயலாலி மணவாளனைப் பற்றியதாகவே அமைந்திருக்கிறது. கலியன் (திருமங்கையாழ்வார்) தாமான தன்மையை விட்டுப் பிராட்டியின் தன்மையை ஏறிட்டுக்கொண்டு பகவதநுபவத்தைப் பேசி அனுபவிக்கும் திருமொழி இது. இவ்வாறு பரகாலர் பிராட்டியின் தன்மையை ஏறிட்டுக்கொண்டு பேசும்போது 'பரகால நாயகி' என்று பெயர் பெறுகிறார்.

ஒரு சமயம் பகவானோடு கலந்து பிரிந்த பரகாலநாயகி (பகவான்) தலைவன் மீண்டும் வருவான் என்று எதிர்பார்த்தாள். அவன் வரவில்லை. அவனுடைய பிரிவைத் தாங்க முடியவில்லை. தலைவன் இருக்குமிடம் செல்லலாம் என்று நினைத்தாள் தலைவி, உடம்பு மெலிந்து கிடந்ததால் போக முடியவில்லை. தன் பார்வையில் காணப்பட்ட வண்டு, குருகு முதலியவற்றைப் பகவானிடம் தூது விடுகிறாள்.

இத்திருமொழியில் முதல் நான்கு பாசுரங்கள் தூதுரைப்பனவாகவும், மேற்பாசுரங்கள் பகவானிடம் நேரில் தமது ஆற்றாமையைப் பரகாலநாயகி சொல்லிக் கதறுவதாகவும் அமைந்துள்ளன.

*நஞ்சீயர், திருமேனி நோவு சாத்திக்கொண்டு எழுந்தருளி இருக்கையில் (திருமேனி பாங்கில்லாமல் இருக்கும்போது) அவருடைய ஸ்ரீபாதத்து முதலிகளில் (சிஷ்யர்களில்) ஒருவரான 'பெற்றி' என்பவர் அவரை விசாரிக்க வந்தார். 'இப்போது ஸ்வாமிக்கு என்ன திருவுள்ளம்' என்று நஞ்சீயரைக் கேட்டார். 'தூவிரியமலருழக்கித் திருமொழிப் பாசுரங்களைக் காதாரக் கேட்கவும், பெருமாள் எழுந்தருளும்போது முன்னும்பின்னும் சுற்றும் வந்து ஸேவிக்கவும் இஷ்டமாக இருக்கின்றது' என்றாராம். அப்போதே வரந்தரும் பெருமாள் அரையர் என்பவரை வரவழைத்து, இத்திருமொழியை ஸேவிக்கச் சொல்லி காதாரக் கேட்டுக்கொண்டிருந்தார். 'தானாக நினையானேல்' என்ற நாலாம் பாசுரத்தைக் கேட்கும்போது, 'நோவுபடுவதற்கு முன்பே வந்து உதவாமல் போனாலும் நேர்ந்த நோயைப் பரிஹரிக்கவாகிலும் வந்தாலாகாதோ (வரக்கூடாதோ!) என்று சொல்லித் தளர்ந்து வருந்தினாராம். இத்திருமொழி, பகவானிடம் ஆராத காதல் கொண்ட அடியார்களை நன்கு உருக்கவல்லதாகும்

*** தூவிரிய மலருழக்கித் துணையோடும் பிரியாதே,**
**பூவிரிய மதுநுகரும் பொறிவரிய சிறுவண்டே,**
**தீவிரிய மறைவளர்க்கும் புகழாளர் திருவாலி,**
**ஏவரி வெஞ்சிலையானுக்கு என்னிலைமை யுரையாயே, (1)**

*சிறகுகளை விரித்துக்கொண்டு தேன் நிரம்பிய மலர்களின் மீது பெடையோடு நன்கு அமர்ந்து தேனைப்பருகும் (புள்ளிகளையுடைய) வண்டே! வைதிக காரியங்களைக் குறைவறச் செய்துவரும் அந்தணர்கள் வாழ்வதால் புகழோடு விளங்கும் திருவாலி நகரிலே விரும்பி எழுந்தருளி இருக்கும் ஏவரி வெஞ்சிலையானுக்கு (விற்பிடித்த வீரனான வயலாலி மணவாளனுக்கு) என்னிலைமையைச் சொல்வாயாக!*

**வண்டே! பிரிவுக்கு அஞ்சியன்றோ நீ பெடையை விட்டுப் பிரியாமல் இருக்கிறாய்! நான் மட்டும் தனித்து வருந்துவதை நீ பொறுமையாகப் பார்த்துக் கொண்டிருப்பது முறையாகுமோ; தலைவனோடு என்னைச் சேர்த்து வைக்கவேண்டியது உன் கடமையன்றோ! என்று கூறுவதாகவே கொள்க.*

**பிணியவிழும் நறுநீல மலர்கிழியப் பெடையோடும்,**
**அணிமலர்மேல் மதுநுகரும் அறுகால சிறுவண்டே!**
**மணிகெழுநீர் மருங்கலரும் வயலாலி மணவாளன்**
**பணியறியேன் நீசென்று என்பயலை நோயுரையாயே! (2)**

*நீலமலரில் பெடையோடு அமர்ந்து மதுவைப் பருகும் அறுகால சிறுவண்டே! நாற்புறமும் செங்கழுநீர்க் கழனிகள் நிறைந்த திருவாலியில் வாழும் வயலாலிமணவாளனின் செய்தி (என்னைப் பற்றிய அவனுடைய நினைவு) இன்னதென்று எனக்கு இதுவரை தெரியவில்லை. பிரிவினால் என் உடல் நிறம் வேறுபட்டிருப்பதை அவனிடம் சென்று கூறுவாயோ!*

**தலைவனை விட்டுப்பிரிந்த தலைவியின் உடல் பிரிவாற்றாமை மிகுதியால் வெளுத்து நிறம் வேறுபடுவதைப் 'பயலைநோய்' என்று இலக்கியங்கள் கூறுகின்றன. பயலை = பசலை.*

**நீர்வானம் மண்ணெரிகாலாய் நின்ற நெடுமால், தன்**
**தாராய நறுந்துளவம் பெருந்தகையேற்கு அருளானே!**
**சீராரும் வளர்பொழில் சூழ் திருவாலி வயல் வாழும்**
**கூர்வாய சிறுகுருகே! குறிப்பறிந்து கூறாயே! (3)**

சோலைகள் நிறைந்த திருவாலி கழனிகளில் மேய்ந்து வாழும் சிறுகுருகே! (நாரையே!) பஞ்சபூதங்களும் தானேயாய் நிற்கும் ஸர்வேசுவரனை வயலாலி மணவாளன் தன்னுடைய திருத் துழாய் மாலையை எனக்கு அருள் செய்யவில்லை. என்மீது அவன் கொண்டுள்ள திருவுள்ளம் மாறிவிட்டதோ அறியேன். நீ சென்று திருவுள்ளத்தை அறிந்து கொண்டு வந்து எனக்குச் சொல்ல வேணும்.

*திருத்துழாய் மாலை என்ற சொல்லால், துழாய் மாலையை அணிந்திருக்கும் வயலாலி மணவாளனின் திருமார்பையே (அணைந்து கொள்வதையே) பரகால நாயகி விரும்புகிறாள் என்று அறிந்து கொள்ள முடிகிறது.

**தானாகநினையானேல் தன்னினைந்து நைவேற்கு, ஓர்**
**மீனாய கொடிநெடுவேள் வலிசெய்ய மெலிவேனோ?**
**தேன்வாய வரிவண்டே! திருவாலி நகராளும்**
**ஆனாயற்கு என்னுறு நோய் அறியச் சென்றுரையாயே. (4)**

தேன் போன்று இனிமையாகப் பேசும் வரிவண்டே! ஸ்வாமியாகிய எம்பெருமான், ஸ்வம் (சொத்து) ஆகிற என்னை நினைக்காவிட்டாலும் நான் *அவனையே நினைத்துக் கொண்டு உடலும் உள்ளமும் தளர்ந்திருக்கிறேன். மன்மதனும் என்னைத் துன்புறுத்துகிறான்; நான் நாளுக்கு நாள் இளைத்துக் கொண்டே இருக்கிறேன். திருவாலி நகராளும் வயலாலி மணவாளனாகிய கண்ணனிடம் நீ சென்று என் மனநோயை அவன் நன்கு அறிந்து கொள்ளும்படித் தெளிவாகக் கூறவேண்டும்.

*(நாம்) பகவானை நினைப்பது நம் கடமை! பகவான் நம்மை நினைப்பது நமக்குப் பெரும் பாக்கியம்; அதுவே நமக்குச் சேமம் (க்ஷேமம்).

**வாளாய கண்பனிப்ப மென்முலைகள் பொன்னரும்ப**
**நாணாளும் நின்னினைந்து நைவேற்கு, ஓ! மண்ணளந்த**
**தாளாளா! தண்குடந்தை நகராளா! வரையெடுத்த**
**தோளாளா! என்றனக்கோர் துணையாளனாகாயே. (5)**

அழகிய திருவடிகளால் பூமியை அளந்தவனே! குளிர்ச்சி பொருந்திய திருக்குடந்தையை ஆள்பவனே! கோவர்த்தனமலையைக் குடையாகத் தாங்கிய மல்லாண்ட திண்தோளனே! நீ என்னை விட்டுப்பிரிந்து சென்ற பிறகு பிரிவாற்றாமையால் என் கண்கள்

கண்ணீரைச் சொரிகின்றன என முலைகளில் நீறுவேறுபாடு தோன்றியுள்ளது. உன்னையே நினைந்து மனம் தளரும் எனக்கு நீ சிறந்த துணைவனாக ஆகவேணும்.

*கோவர்த்தன மலையைச் சுமந்தவனுக்கு நம்மை ரக்ஷிக்கும் சுமையைத் தாங்குவது பெரிய செயலோ!

**தாராய தண்டுளவ வண்டுழுத வரைமார்பன்,**
**போரானைக் கொம்பொசித்த புட்பாக னென்னம்மான்**
**தேராரும் நெடுவீதித் திருவாலி நகராளும்**
**காராயன் என்னுடைய கனவளையு கவர்வானோ!** (6)

திருத்துழாய் மாலையில் அமர்ந்துள்ள வண்டுகளால் சேறு செய்யப் பட்ட (மகரந்தத்துகள் படியப் பெற்ற) மலைபோன்ற திருமார்பை யுடையவனும், குவலயாபீடம் என்ற மதயானையின் தந்தங்களை முறித்தவனும், கருடனை வாகனமாகக் கொண்டவனும், என் தலை வனும், தேரோடும் வீதிகளையுடைய திருவாலி நகரை ஆள்பவனும் கண்ணபிரானுமாகிய வயலாலி மணவாளன் என் பொன் வளைகளையும் கவர்ந்து விடுவானோ!

*கண்ணன் வெண்ணெயைத்தான் கொள்ளை கொள்வான் என்பதில்லை; அவனையே நினைக்கும் பெண்களின் நாணம், மடம்' அச்சம் எல்லாவற்றையும் கவர்ந்து விடுவான்.

**கொண்டரவத் திரையுலவு குரைகடல்மேல் குலவரைபோல்**
**பண்டரவி னணைக்கிடந்து பாரளந்த பண்பாளா!**
**வண்டமரும் வளர்பொழில்சூழ் வயலாலி மைந்தா! என்**
**கண்டுயில் நீகொண்டாய்க்கு என்கனவளையும் கடவேனோ** (7)

அடியார்களின் கூக்குரல் கேட்பதற்குத் தகுதியுள்ள இடமாகத் திருவுள்ளம் கொண்டு பாற்கடலில் பள்ளிகொண்டிருக்கும் பெரு மானே! இந்திரனின் கூக்குரல் கேட்டுப்பதறி எழுந்து மாவலியிடம் வாமனனாகச் சென்று மூவடிகேட்டுத் திரிவிக்கிரமனாக வளர்ந்து உலகை அளந்தவனே! சிறந்த பண்பாளனே! வண்டுகள் ஒலிக்கும் சோலைகளைக் கொண்ட கழனிகளையுடைய திருவாலியில் வாழும் மணவாளா! உன்னையே நினைத்து உறக்கத்தை இழந்தேன்! என் பொன்வளைகளையும் இழந்து விடுவேனோ! தெரியவில்லையே!



திருவாலி நகராளும் வயலாளி மணவாளன் (திருநகரி)

*பாகவதோத்தமர்களுக்கு எம்பெருமானை அண்டுவதற்கு முன்பும் உறக்கமில்லை; அடைந்த பின்பும் உறக்கமில்லை. ஸதா பச்யந்தி ஸூரய:

**குயிலாலும் வளர்பொழில்சூழ் தண்குடந்தைக் குடமாடீ!**
**துயிலாத கண்ணிணையேன் நின்னினைந்து துயர்வேனோ!**
**முயலாலும் இளமதிக்கே வளையிழந்தேற்கு இது நடுவே**
**வயலாலி மணவாளா! கொள்வாயோ மணிநிறமே! (8)**

திருவாய்ப்பாடியில் குடக்கூத்து ஆடிய அழகை வெளிப்படுத்திக் கொண்டு திருக்குடந்தையில் கண்வளரும் பிரானே! உறக்கம் என்பதே எனக்கு இல்லாமல் போயிற்று: உன்னையே நினைத்து துக்கித்துக்கிடக்கிறேன். வானத்தில் சந்திரன் தோன்றியதுமே மேனி மெலிந்து வளையை இழக்கின்றேன். எனக்கு இத்துன்பம் போதாதோ! இத்தனை துன்பங்களிடையே நீயும் வந்து புகுந்து என்மேனி நிறத்தையும் கொள்ளை கொள்ள வேண்டுமோ?

*சந்திரனின் நடுவில் இருக்கும் கறுத்த மறுவைப் புலவர்கள் முயல் என்று கூறுவார்கள்.

**நிலையாளா நின் வணங்க வேண்டாயேயாகிலும், என்**
**முலையாள ஒரு நாள் உன்னகலத்தால் ஆளாயே?**
**சிலையாளா! மரமெய்த திறலாளா! திருமெய்ய**
**மலையாளா நீயாள வளையாள மாட்டோமே. (9)**

சார்ங்கமென்னும் வில்லாள்பவனே! (இராமாவதாரகாலத்தில்) ஏழு ஸால மரங்களை ஒரே பாணத்தினால் வீழ்த்தியவனே! திருமெய்யம் என்னும் திருப்பதியை ஆள்பவனே! உனக்கு நிலையான அடிமையாக இருந்து, உன்னை நான் வணங்கும்படி நீ திருவுள்ளம் பற்றாமல் போனாலும், ஒரு நாளேனும் நீ என்னை நன்கு அணைத்துக் கொள்ளவேண்டும், உன்னுடைய ஆளுகையில் உட்பட்டிருக்கும் நான் கையில் வளைதாங்காமல் துன்புறுவேண்டுவதன்றோ எனக்குக் கதி!

*அம்மங்கியம்மாள் என்னும் ஓர் ஆசிரியர் நோயுற்று சயனித்துக் கொண்டிருந்தார். நஞ்சீயரும் நம்பிள்ளையும் அவரைக்காண எழுந்தருளினார்கள். நஞ்சீயர் அவரைக்கண்டு மிகவும் வருந்தி, ஸ்வாமிந்! தேவரீர் பகவத்பாகவத கைங்கரியத்திலும், குணானுபவத்திலும் ஆழ்ந்தவர்; எம்பெருமான் மற்ற

வர்களைப்போல தேவரீரையும் இப்படிக் கஷ்டப்படுத்துகிறானே!' என்றாராம். 'நீயாள வளையாள மாட்டோமே' என்பதன்றோ கலியன் பாசுரம்! எம்பெருமானுக்கு வாழ்க்கைப்பட்டால் க்லேசப்பட்டுத்தானே (கஷ்டப்பட்டுத்தானே) ஆகவேண்டும் என்று அம்மங்கியம்மாள் கூறினாராம். பிறகு வெளியில் எழுந்தருளிய நஞ்சீயர் 'பார்த்தீரா இவருடைய அத்யவஸாயத்தை!' என்ன பாசுரம் எடுத்துக்காட்டினார்!' என்று நம்பிள்ளையிடம் கூறி மகிழ்ந்தாராம்.

*மேன்மேலும் கஷ்டங்களைக் கொடுத்தன்றோ எம்பெருமான் பக்தியைச் சோதிக்கிறான்!

*** மையிலங்கு கருங்குவளை மருங்கலரும் வயலாலி,**
**நெய்யிலங்கு சுடராழிப் படையானை நெடுமாலை,**
**கையிலங்கு வேற்கலியன் கண்டுரைத்த தமிழ்மாலை,**
**ஐயிரண்டுமிவை வல்லார்க்கு அருவினைகளடையாவே. (10)**

குவளை மலர்கள் நிறைந்த கழனிகளால் சூழப்பட்ட திருவாலி நகரில் கையும் திருவாழியுமாக எழுந்தருளி இருக்கும் வயலாலி மணவாளனைக்குறித்துத் திருமங்கைமன்னன் அருளிய இப்பத்துப் பாசுரங்களையும் சொல்லுகிறவர்களைத் தீவினைகள் அணுகா.

*இப்பத்துப் பாசுரங்களும் 'வயலாலி மணவாளனின் அன்பைப் பெற்றுத்தரும்.

அடிவரவு : தூவிரிய பிணி நீர்வானம் தானாக வாளாய தாராய
கொண்டு குயில் நிலையாளா மையிலங்கு கள்வன்.

## நாலாம்பத்து—ஒன்பதாம் திருமொழி.

### நும்மைத் தொழுதோம்.

(திருமங்கையாழ்வார், திருவிந்தளூர்ப் பரிமளரங்கநாதனின் ஸௌந்தர்யாதிசயத்தையும் (நிகரில்லாத அழகையும்) வாத்ஸல்யம் முதலான குணங்களின் மேன்மையையும் செவியுற்று, அவனைக் கண்ணாரக் கண்டு கைகளாலாரத் தொழுதேத்தி ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்யவேண்டும் என்று பாரித்தார். திருவிந்தளூருக்கு எழுந்தருளினார். பக்திப் பிச்சனான எம்பெருமான் தன்னையே நினைந்துருகும் அடியாரிடம் அளவு கடந்த அன்புடையவன் என்று கூறுகிறார்கள் ஆனால்; ஆழ்வாரின் பாரிப்பில் சிறிதளவும் எம்பெருமானிடம் வெளிப்படையாகக் காணமுடியவில்லை: ஆழ்வாரின் எதிரில் ஸேவை ஸாதிக்கவும் இல்லை; எதிர்கொண்டு வரவேற்கவும் இல்லை; அன்போடு உரையாடவும் இல்லை. கோபுர வாசல் கதவும் சாத்தப் பட்டிருந்தது, ஆழ்வாரால் பொறுத்திருக்க முடியவில்லை; பெண்ணுடையுடுத்து (பெண்ணான தன்மையை ஏறிட்டுக் கொண்டு)ப் பேசி வெளியிட்ட துடிப்புகளை எல்லாம் இத்திருமொழியில் தானான தன்மையில் பேசி வெளியிடுகிறார். அநுஸந்தித்தாலும், கேட்டாலும் உள்ளத்தை உருக்கவல்லது இத்திருமொழி

உலகில், 'பிறரைப் பட்டினி போட்டுச் சிலர் தாமே வயிறு வளர்ப்பதைக் காண்கிறேன்' இக்கலையை நீ யாரிடம் கற்றுக் கொண்டாய்? எல்லோரும் அனுபவிக்க வேண்டிய உன் திருமேனி நிறத்தை எவருக்கும் காட்டாமல் நீயே அனுபவித்துக் கொண்டிருக்கிறாயே! 'உலகு தன்னை வாழநின்ற நம்பீ!' இதுதான் நீ உலகை வாழ வைக்கும் முறையோ!' என்கிறார் ஆழ்வார்.

*** நும்மைத் தொழுதோம் நுந்தம்பணி செய்திருக்கும் நும்மடியோம்**
**இம்மைக்கு இன்பம் பெற்றோம் எந்தாய்! இந்தளூரீரே!**
**எம்மைக் கடிதாக் கருமமருளி ஆவா வென்றிரங்கி**
**நம்மையொருகால் காட்டி நடந்தால் நாங்களுய்யோமே.** (1)

திருவிந்தளூரில் எழுந்தருளி இருக்கும் என் தலைவனே! தேவரீரை ஆச்ரயித்தோம் உமக்குத் தொண்டு செய்வதே ஒரு பொருளாக ஆகும்படியான (ஸத்தை பெறக்கூடிய) அடிகளாக இருக்கின்றோம்; இப்பிறவியில் உம்மைப் பற்றிய ஞானமயமான (உணர்வாகிற) ஆனந்தத்தைப் பெற்றிருக்கின்றோம். இப்படிப்பட்ட எங்கள் மீது இரக்கம் கொண்டு சீக்கிரமாகவே எங்களை ஏதேனும் ஒரு கைங்

கர்யத்தில் நியமித்து, எங்கள் கண்முன்னே ஒருமுறையேனும் ஸேவை ஸாதித்தால் நாங்கள் (உஜ்ஜீவிக்க மாட்டோமா!) அரும் பயன்பெற்றவர் களாக ஆகமாட்டோமா?

பகவானுக்குக் கைங்கர்யம் செய்யும் பேறு எல்லோருக்கும் எளிதில் கிடைத்துவிடாது, இந்த பாக்கியத்தை மனமிரங்கி அவனே நமக்குக் கொடுத்தால் தான் கைங்கர்யம் செய்ய முடியும். கைங்கர்யம் ஒன்றே நீங்காத செல்வம்!

**சிந்தை தன்னுள் நீங்காதிருந்த திருவே! மருவினிய**
**மைந்தா! அந்தணாலி மாலே! சோலைமழகளிறே!**
**நந்தாவிளக்கின் சுடரே! நறையூர்நின்ற நம்பீ! என்**
**எந்தாய்! இந்தளூராய்! அடியேற்கிறையும் இரங்காயே!** (2)

என் நெஞ்சை விட்டு நொடிப்பொழுதும் நீங்காதிருக்கும் செல்வமே; அநுபவிக்க அநுபவிக்க இனியனாய் இருக்கும் மைந்தனே அழகியதும் குளிர்ந்திருப்பதுமான திருவாலி நகரில் வாழும் எம்பெருமானே! திருமாலிருஞ்சோலை மலையில் திகழும் யானைக் குட்டியே! அணையா விளக்கின் சுடரே! திருநறையூர் நம்பியே! திருவிந்தளூர் எம்பெருமானே! அடியேன் விஷயத்தில் சிறிதேனும் கருணைகாட்டாயோ?

ஆழ்வாரின் திருவுள்ளத்தில் எப்போதும் இருப்பவனும் வயலாலி மணவாளன், திருமாலிருஞ்சோலை அழகர், திருநறையூர் நம்பி என்று பலபடியாக ஸேவை ஸாதிப்பவனும் திருவிந்தளூர்ப் பரிமள ரங்கநாதனே யாம்.

**பேசுகின்றது இதுவே வையமீரடியால் அளந்த**
**மூசிவண்டு முரலும் கண்ணிமுடியீர்! உம்மைக் காணும்**
**ஆசையென்னும் கடலில் வீழ்ந்திங்கயர்த்தோம், அயலாரு**
**மேசுகின்றது இதுவே காணும் இந்தளூரீரே!** (3)

உலகங்களை இரண்டடிகளால் அளந்து கொண்டவனும், வண்டுகள் மொய்க்கும் மலர்மாலையைத் திருமுடியில் அணிந்துகொண்டு ஸேவைஸாதிப்பவனுமான (காட்சியளிப்பவருமான) திருவிந்தளூர் எம்பெருமானே! உன்னை ஸேவிக்க வேணும் என்ற ஆசைப் பெருங்கடலில் வீழ்ந்து (அயர்ந்தோம்) அறிவிழந்தோம்! ஆனால், 'எம்பெருமான் ஸேவை தரவில்லை; இவர்கள் ஸேவிக்கவில்லை(

என்று அனைவரும் ஏசுவார்களே! இந்த ஏச்சுக்கு இடமாகும்படி தேவரீர் நடந்து கொள்ள வேண்டா என்பதே அடியேன் (சொல்லுவது) பிரார்த்திப்பது!

* அடியார்களின் ஆசையை நிறைவேற்றிவைத்து அவர்களைக் காப்பாற்றுகிறவன் எம்பெருமான்.

**ஆசைவழுவாதேத்தும் எமக்கிங்கிழுக்காய்த்து, அடியோர்க்குத்**
**தேசமறிய உமக்கே யாளாய்த் திரிகின்றேமுக்கு**
**காசினொளியின் திகழும் வண்ணம் காட்டீரெம்பெருமான்**
**வாசிவல்லீரிந்தளூரீர் வாழ்ந்தேபோம் நீரே. (4)**

இவ்வுலகில் ஆசைகுன்றுமல் துதிக்கும் எமக்கு அவ்வாறு துதிப்பதே இழுக்காக ஆயிற்று. உலகறிய உமக்குத் தொண்டராகத் திரிகின்ற எமக்குப் பொன்னொளியை விட அழகியதான தேவரீருடைய வடிவழகைக் காட்டுவதில்லை. இந்தளூர் எம்பெருமானே! தாரதம்யம் பாராட்டுகின்றீர்! உம்முடைய உடம்பை நீரே கட்டிக்கொண்டு அநுபவித்து வாழ்ந்து போவீராக!

* பரமபதத்திலுள்ளாருக்குக் காட்டும் வடிவழகை நம் போல்வாருக்கும் காட்டுவதற்காகவே எம்பெருமான் திருவிந்தளூரில் எழுந்தருளி இருக்கிறுன்.

**தீயெம் பெருமான் நீரெம் பெருமான் திசையுமிருநிலனு**
**மாய், எம்பெருமானுகி நின்ருல் அடியோங்காணுமால்**
**தாயெம் பெருமான் தந்தை தந்தையாவீர், அடியோமுக்**
**கேயெம் பெருமான் அல்லீரோ நீர் இந்தளூரீரே. (5)**

திருவிந்தளூர்ப்பெருமானே! தேவரீர் நிலம், நீர், தீ, திசைகள் ஆகியவற்றில் அந்தர்யாமியாக மறைந்து நின்ருல் அடியோங்கள் தேவரீரைக்காணமுடியாதவர்களாக இருக்கின்றேம். எங்களுக்குத் தாயாகவும் தந்தையாகவும் தலைவராகவும் இருக்கும் பெருமானே! தேவரீர் அடியோங்களுக்கே உரிய ஸ்வாமியல்லவோ! (தலைவரல்லவோ!.)

* எல்லாப் பொருள்களிலும் (அந்தர்யாமியாக) உள்ளே உறையும் கட்கிலியான எம்பெருமானே, நாம் ஸேவிப்பதற்காகத் திருவிந்தளூரிலே எழுந்தருளி இருக்கிறுன்.

**சொல்லா தொழிய கில்லேன் அறிந்த சொல்லில், நும்மடியார்**
**எல்லாரோடு மொக்க எண்ணியிருத்தீரடியேனை.**
**நல்லாரறிவீர் தீயாரறிவீர் நமக்கிவ் வுலகத்தில்**
**எல்லாமறிவீர் ஈதேயறியீர் இந்தளூரீரே. (6)**

*திருவிந்தளூர் எம்பெருமானே! நான் ஒன்று சொல்ல நினைக்கிறேன், அதைச் சொல்லுகிறேன் கேளீர்! உம்மைப் பிரிந்து கணநேரமும் தரித்திருக்க முடியாத அடியேனை மற்ற அடியார்களோடு ஸமமாக நினைக்கிறீர்! நல்லவர்களையும் தீயவர்களையும், இவ்வுலக நடையினையும் தேவரீர் நன்கு அறிந்திருந்தும், என்னுடைய தன்மையை மட்டும் அறிய மாட்டாதவராக இருக்கிறீர்.*

** எம்பெருமானை விட்டு 'நஜீவேயம் க்ஷணமபி, (கணப்பொழுதும் பிழைக்கமாட்டேன்) என்றிருப்பவர் திருமங்கையாழ்வார்*

**மாட்டீரானீர் பணிநீர்கொள்ள எம்மைப் பணியறியா**
**வீட்டீர், இதனைவேறே சொன்னோம் இந்தளூரீரே!**
**காட்டீரானீர் நுந்தமடிக்கள் காட்டில், உமக்கு இந்த**
**நாட்டே வந்து தொண்டரான நாங்களுய்யோமே? (7)**

*எம்பெருமானே! எம்மிடத்தில் கைங்கர்யத்தைப்பெற விரும்பாத வராக இருக்கிறீர்! நாங்கள் உமக்கு அடிமைப்பட்டவர்கள் என்பதை மட்டும் உணர்த்திவிட்டு எங்களைக் கைவிட்டீர்! ஒன்று மட்டும் சொல்கிறோம். தேவரீருடைய திருவடிகளை எங்களுக்குக் காட்டாமல் போனீர்! காட்டி அருளினால் (இவ்வுலகில்) அடியவர் களாகிய நாங்கள் தேவரீருடைய திருவடிகளில் தொண்டு செய்து உய்வு பெற மாட்டோமா?*

** கைங்கர்யம் செய்யாவிடில் சேஷத்வம் நிறம் பெறாது. (பகவானுக்கும், அவனடியார்களுக்கும் ஆவலோடு தொண்டு செய்யாவிடில் அடிமைத் தன்மை விளங்காது.)*

**முன்னை வண்ணம் பாலின்வண்ணம் முழுதும் நிலைநின்ற**
**பின்னை வண்ணம் கொண்டல் வண்ணம் வண்ணமெண்ணுங்கால்**
**பொன்னின் வண்ணம் மணியின் வண்ணம் புரையுந்திருமேனி,**
**இன்ன வண்ணமென்று காட்டீர் இந்தளூரீரே! (8)**

*இந்தளூர் எம்பெருமானே! கிருதயுகத்தில் எல்லோரும் ஸத்வ குணம் நிறைந்தவர்களாக இருந்தமையால் அவர்கள் உகப்பதற்*

காகத் தேவரீர் சுத்தமான நிறமாகிய (பால் போன்ற நிறத்தை) வெண்மை நிறத்தைக் கொண்டிருந்தீர்! கலியுகத்தில் காளமேகத்தின் நிறமாகிய கருமைநிறம். பொன் நிறத்தையும் நீல மணி நிறத்தையும் ஒத்திருக்கும் தேவரீருடைய திருமேனி அர்ச்சாவதாரத்தில் எந்த நிறத்தைக் கொண்டிருக்கிறது? என்பதை அடியேன் அறிய வேண்டாவோ! 'இதுவே என்நிறம், என்று தேவரீர் காட்டியருள வேண்டும்.

*பகவானுக்குக் கிருதயுகத்தில் பாலின் நிறம் போன்று வெண்மைநிறம், திரேதாயுகத்தில் சிவப்பு; த்வாபரயுகத்தில் பசுமை, கலியுகத்தில் நீலம் என்று பெரியோர் கூறுவர்.

**எந்தை தந்தை தம்மானென்றென்று எமரேழளவும்**
**வந்து நின்ற தொண்டரோர்க்கே வாசிவல்லீரால்.**
**சிந்தை தன்னுள் முந்திநிற்றிர் சிறிதும் திருமேனி**
**இந்த வண்ணமென்று காட்டீர் இந்தளூரீரே. (9)**

என்னுடைய மூதாதையர்கள் ஏழேழ் தலைமுறையாகத் தேவரீருக்கே அடிமை செய்பவர்கள். அவர்கள் குடியிலே பிறந்த அடியோங்களும் கைங்கர்யம் செய்வதற்காகத் தேவரீடம் வந்து நிற்கிறோம். நம் திருமேனியைக் காண இவன் தகுந்தவனோ! தகாதவனோ! என்று எங்களைப் பற்றி வாசி பார்க்கிறீர்! ஒரு ஆலோசனையும் செய்யாமல் என் நெஞ்சில் வந்து நிற்கிறீர். நெஞ்சில் நிற்பது போலக் கண்ணெதிரில் வந்து தோன்றக்கூடாதா? திருமேனி நிறத்தைச் சிறிதும் காட்டாமல் இருக்கிறீரே!

*கரியவனைக் காணாத கண் என்ன கண்ணே!

***ஏரார்பொழில்சூழ் இந்தளூரில் எந்தை பெருமானை**
**காரார் புறவின் மங்கைவேந்தன் கலியனொலி செய்த**
**சீராரின் சொல்மாலை கற்றுத்திரிவாருலகத்தில்**
**ஆராரவரே அமரர்க் கென்றும் அமரராவாரே. (10)**

திருவிந்தளூர்ப் பெருமானைப்பற்றித் திருமங்கையாழ்வார் அருளிய சொல்மாலையாகிற இத்திருமொழியைச் சொல்லிக்கொண்டு வாழ்பவர்கள் நித்யஸூரிகளால் கொண்டாடப்படுவார்கள்.

*அமரர்க்கும் அமரராக விளங்குவோர் ஸ்ரீவைஷ்ணவர்கள்.

அடிவரவு :- நும்மை சிந்தை பேசுகின்றது ஆசை தீ சொல்லாது மாட்டீர் முன்னை எந்தை ஏரார் ஆய்ச்சியர்.

# ஐந்தாம் பத்து—ஏழாம் திருமொழி.

## பண்டை நான் மறையும்.

இது திருவரங்கம் பெரிய கோயில் மங்களாசாஸனப் பதிகம். திருமங்கையாழ்வார் திருவரங்கத்திற்கு எழுந்தருளி அரங்கனின் பெருமைகளையெல்லாம் 'உந்திமேல் நான்முகனை' என்ற திருமொழி முதல் கூறி வருகிறார். இத்திருமொழியில் அவனுக்கே உரிய ம்கைவிலக்ஷணமான சிறப்புகளைச் சொல்லி 'அவனே எல்லாம், என்று உலகுக்கு உணர்த்தத்துகிறார்.

***பண்டை நான் மறையும் வேள்வியும் கேள்விப்**
**பதங்களும் பதங்களின் பொருளும்**
**பிண்டமாய் விரிந்த பிறங்கொளியனலும்**
**பெருகிய புனலொடு நிலனும்**
**கொண்டல் மாருதமும் குரைகடலேழும்**
**ஏழு மாமலைகளும் விசும்பும்**
**அண்டமும் தானாய் நின்ற வெம்பெருமான்**
**அரங்கமா நகரமர்ந்தானே.** (1)

ரிக், யஜுஸ், ஸாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களும், அந்தந்த வேதங்களால் சொல்லப்படுகிற யாகங்களும், கேட்டறியவேண்டிய வியாகரண சாஸ்திரமும், அவற்றிலுள்ள சொல்லால் அறியப்படுகிற ஜீவஸமஷ்டிப் பொருளும், நிலம் நீர் தீ கால் விசும்பு எனப்படும் பஞ்ச பூதங்களும், ஏழு கடல்களும், ஏழு குலபர்வதங்களும், இவற்றோடு கூடிய பிரம்மாண்டமும், தான் என்ற சொல்லுக்குள்ளே அடங்கும்படி தனக்கு ப்ரகார. மாக இருக்கப்பெற்ற எம்பெருமான், (முதலில் அவ்யக்தம் என்ற பெயரோடு காரணப் பொருளாக இருந்து, பிறகு மஹதாதி ரூபங்களாலே விரிவடைந்தவனும், அப்பொருள்கள் எல்லாவற்றிலும் அந்தர்யாமியாக (உள்ளேமறைந்து) இருப்பவனுமான ஸ்ரீமந்நாராயணனே) திருவரங்கம் பெரிய கோயிலில் எழுந்தருளி இருக்கிறான்.

*ஏழு கடல்களாவன :- (லவண, மதுர, இக்ஷு, மது, க்ருத, ததி, க்ஷீரம்) உவர்க்கடல், நன்னீர்க்கடல், கரும்புச்சாறு, தேன், நெய், தயிர், பாற்கடல்கள்.

ஏழு குலபர்வதங்களாவன -: கைலாசம், இமயம், மந்தரம் விந்தியம், நிடதம், ஹேமகூடம், நீலகிரி.

**இந்திரன் பிரமன் ஈசனென்றிவர்கள்**
**எண்ணில் பல்குணங்களே இயற்ற,**
**தந்தையும் தாயும் மக்களும் மிக்க**
**சுற்றமும் சுற்றி நின்றகலாப்**
**பந்தமும், பந்த மறுப்பதோர் மருந்தும்**
**பான்மையும் பல்லுயிர்க் கெல்லாம்**
**அந்தமும் வாழ்வுமாய வெம்பெருமான்**
**அரங்கமா நகரமர்ந்தானே.** (2)

இந்திரன், பிரமன், சிவன் எனப்படும் தேவர்களால் துதிக்கப் படுகிறவனும் (குணநுபவத்தோடு துதிக்கப்படுகிறவனும்) உலகிலுள்ள உயிர்களுக்கெல்லாம் தந்தையாகவும், தாயாகவும், பிள்ளையாக்வும், சுற்றமாகவும், பந்துக்களாகவும், ஸம்ஸார பந்தத்தை அறுக்கவல்ல மருந்தாகவும், ஸம்ஸாரபந்தம் நீங்கிய பின் இருக்கக்கூடிய நிர்மல ஸ்வபாவமும் ஆக இருந்து, படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவற்றுக்குக் கடவனுய் இருப் பவனுமான எம்பெருமான் திருவரங்கத்தில் படுத்திருக்கிருன்,

*ஒவ்வொருவனுக்கும் எல்லா உறவுமாக இருப்பவன் எம் பெருமான் ஒருவனே.

**மன்னுமா நிலனும் மலைகளும் கடலும்**
**வானமும் தானவருலகும்,**
**துன்னுமாயிருளாய்த் துலங்கொளி சுருங்கித்**
**தொல்லைநான் மறைகளும் மறைய,**
**பின்னும் வானவர்க்கும் முனிவர்க்கும் நல்கிப்**
**பிறங்கிருள் நிறங்கெட, ஒருநாள்**
**அன்னமாயன்றங் கருமறை பயந்தான்**
**அரங்கமா நகரமர்ந்தானே.** (3)

முன் ஒரு காலத்தில் மது கைடபர் என்ற அசுரர்கள் பிரம்ம தேவனிடமிருந்து மறைகளைக் கவர்ந்துசென்று கடலுக்குள் மறைந்து விட்டார்கள். மறைகள் மறைந்தமையால் உலக மெங்கும் பேரிருள் மூடின. அதனுல் பிரம்மா முதலான தேவர் களும் மகரிஷிகளும் என்ன செய்வது என்றே தெரியாமல் திகைத் தார்கள். அவர்கள் மீது அருள் கொண்டு திருவுள்ளம் இரங்கி ஹம்ஸாவதாரம் மேற்கொண்டு கடலுக்குள் புகுந்து அவ்வசுரர்

களைத் தேடிக் கண்டுபிடித்து அழித்து அந்த வேதங்களை மீட்டு வந்து பிரம்மாவுக்கு உபதேசம் செய்தருளிய எம்பெருமானே திருவரங்கத்தில் எழுந்தருளி இருக்கிறான்.

*ஹம்ஸமாக அவதரித்தவன் ஸ்ரீரங்க ராஜ ஹம்ஸம்.

**மாயிருங் குன்ற மொன்று மத்தாக**
**மாசுணமதனொடு மளவி**
**பாயிரும் பௌவம் பகடு விண்டலறப்**
**படுதிரை விசும்பிடைப் படர,**
**சேயிரு விசும்பும் திங்களும் சுடரும்**
**தேவரும் தாமுடன் திசைப்ப**
**ஆயிரம் தோளால் அலைகடல் கடைந்தான்**
**அரங்க மாநகரமர்ந்தானே.** (4)

அகன்று உயர்ந்திருக்கும் மந்தரமலையை மத்தாக்கி, அதில் வாசுகி என்னும் நாகத்தைச் சுற்றி, பரந்தும் நீண்டுமிருக்கிற கடல் யானையைப் போல் பிளிறும் படியாகவும் அலைகள் வேகமாக உயர்ந்து வானளாவிச் செல்லவும், சுவர்க்கம் முதலிய லோகங்களும். சந்திரன் முதலிய ஒளிப் பொருள்களும் தேவதைகளும் ஒரேகாலத்தில் வியக்கும்படியாகவும். பல திருக்கைகளால் அலை கடலைக் கடைந்தருளிய எம்பெருமான் திருவரங்கப் பெருநகரில் எழுந்தருளி இருக்கிறான்.

*அமுதத்திற்காகக் கடல் கடைந்தவன் திருவரங்கத்தமுதன்.

**எங்ஙனே யுய்வர் தானவர் நினைந்தால்**
**இரணியன் இலங்கு பூணகலம்**
**பொங்கு வெங்குருதி பொன்மலை பிளந்து**
**பொழிதரும் அருவி யொத்திழிய**
**வெங்கண் வாளெயிற்றோர் வெள்ளி மாவிலங்கல்**
**விண்ணுறக் கனல் விழித்தெழுந்தது**
**அங்ஙனே யொக்க அரியுரு வானை**
**அரங்கமாநகரமர்ந்தானே.** (5)

இரணியனுக்கு ஏற்பட்ட கதியை அசுரர்கள் நினைப்பார்களாகில் எப்படிதான் உயிர்தரித்திருப்பார்கள்! மேருமலையைப் பிளந்து கொண்டு வெள்ளமிடும் அருவிபோல் இரணியனின் மார்பிலிருந்து

இரத்தம் (குருதி) பெருகும்படியாக தீப்பொறி பறக்கும் கண்களை யும், வாள் போன்ற பற்களையும் கொண்டு ஒரு வெள்ளி மலை வானத்தைக் கிட்டி, தீவிழி விழித்து எழுந்தால் எப்படி இருக்குமோ அப்படிப்பட்ட நரஸிம்ஹாவதாரத்தை மேற்கொண்ட எம்பெருமான் திருவரங்கமாநகரில் எழுந்தருளி இருக்கிறான்.

*அழகிய சிங்கராக அவதரித்தவன் அழகிய மணவாளன்.*

**ஆயிரம் குன்றம் சென்று தொக்கனைய**
**அடல்புரை எழில் திகழ் திரடோள்.**
**ஆயிரம் துணிய அடல் மழுப்பற்றி,**
**மற்றவன் அகல் விசும்பணைய**
**ஆயிரம் பெயரால் அமரர் சென்றிறைஞ்ச**
**அறிதுயில் அலை கடல் நடுவே**
**ஆயிரஞ் சுடர்வாய் அரவணைத்துயின்றான்**
**அரங்கமா நகரமர்ந்தானே.** (6)

மிக்க வலிமையும் அழகும் பொருந்தி ஆயிரம் மலைகள் சேர்ந்து நிற்பன போன்ற கார்த்த வீரியஅருச்சுனனின் ஆயிரம் தோள்களை யும் மழுப்படையால் (கோடரி என்றஆயுதத்தால்) அறுத்துத்தள்ளி அவனை வீரசுவர்க்கம் அடையச் செய்து அதன் பிறகு தேவர்கள் ஸஹஸ்ரநாமங்களையும் சொல்லித் துதிக்கும்படியாக திருப்பாற் கடலில் திருவனந்தாழ்வான் மீது சயனித்துக் கொண்டு யோக நித்திரை செய்யும் பெருமானே, திருவரங்கப் பெருநகரில் சயனித்து இருக்கிறான்.

*பரசுராமராக அவதரித்தவர் திருவரங்கத்தில் வாழும் நம் (பெரிய) பெருமாள்.

**சுரி குழல் கனிவாய்த் திருவினைப்பிரித்த**
**கொடுமையிற் கடுவிசையரக்கன்**
**எரி விழித்திலங்கு மணிமுடி பொடிசெய்து**
**இலங்கை பாழ்படுப்பதற் கெண்ணி**
**வரிசிலை வளைய வடு சரந்துரந்து**
**மறிகடல் நெறிபட, மலையால்**
**அரிகுலம் பணி கொண்டு அலைகடலடைத்தான்**
**அரங்கமா நகரமர்ந்தானே** (7)

சிறந்த கூந்தலையும், கொவ்வைக் கனிபோன்ற அதரத்தையும் (உதடுகளையும்) கொண்ட ஸீதாபிராட்டியைத் தன்னைவிட்டு இராவணன் பிரித்ததால் பெருஞ்சினம் கொண்டு இராமன், இராவணனின் கிரீடங்களை நொறுக்கித் தள்ளி, அவனது இலங்கையையும் அழித்து விட எண்ணி, கூர்மையான அம்புகளைக் கடலில் செலுத்திக்கடலை அடக்கி, வானரங்களைக் கொண்டு மலைகளைத் தள்ளிவரச் செய்து அக்கடலில் அணை கட்டினான். அந்த எம்பெருமானே திருவரங்க மாநகரில் சயனித்திருக்கிறான்.

*அரவணை போன்று அழகிய அணையைக் கட்டியவர் அழகிய மணவாளன். 'ஸேதுயாத்திரையை அரவணையாத்திரை' என்று பெரியோர்கள் கூறுவார்கள்.

**ஊழியாய் ஓமத்துச்சியாய் ஒருகால்**
**உடைய தேரொருவனாய். உலகில்**
**சூழிமால் யானைத்துயர் கெடுத்து**
**இலங்கை மலங்க வன்றடுசரந்துரந்து**
**பாழியால் மிக்க பார்த்தனுக்கருளிப்**
**பகலவ னொளி கெட பகலே**
**ஆழியாலன்றங்கு ஆழியை மறைத்தான்**
**அரங்க மா நகரமர்ந்தானே.** (8)

காலம் முதலிய எல்லாபதார்த்தங்களுக்கும் 'நிர்வாஹகனாய், (அவற்றை நடத்துகிறவனாய்) யக்ஞங்களுக்குத் தலைவனாய், ஒற்றைச்சக்கரத்தேரை உடைய சூரியனுக்கு அந்தராத்மாவாக இருப்பவனாய், கஜேந்திராழ்வானின் துன்பத்தைப் போக்கினவனாய், இலங்கை அழியும்படி கொலையம்புகளைச் செலுத்தினவனாய், அருச்சுனனிடம் அருள்கொண்டு, சூரியனின் ஒளி மழுங்கும்படி பகற்பொழுதிலேயே திருவாழியால் (சக்கரத்தினால்) சூரியனை மறைத்தவனுமாகிய எம்பெருமான் திருவரங்கத்தில் எழுந்தருளி இருக்கிறான்.

* அடியார்களைக் காப்பதிலேயே நோக்குடையவன் திருவரங்கன்.

**பேயினார் முலையூண் பிள்ளையாய் ஒருகால்**
**பெருநிலம் விழுங்கி, அதுமிழ்ந்த**
**வாயனாய் மாலாய் ஆலிலை வளர்ந்து**
**மணிமுடி வானவர் தமக்குச்**

**சேயனாய், அடியேற் கணியனாய் வந்து**
**என சிந்தையுள் வெந்துயர றுக்கும்**
**ஆயனாயன்று குன்றமொன்றெடுத்தான்**
**அரங்கமா நகரமர்ந்தானே.** (9)

*தாய்வடிவு கொண்டு தன்னைக் கொல்லவந்த பூதனையின் விஷப் பாலைப் பருகும் வழியாகவே அவளை (பூதனையை) அழித்தவனும் ஊழிக்காலத்தே உலகை உட்கொண்டு படைப்புக் காலத்தில் மீண்டும் உலகத்தை வெளியிட்டவனும் பிரளய காலத்தில் உலகமுண்டு ஒராலிலையில் துயின்றவனும், பிரம்மா, சிவன் முதலான தேவர்களுக்கு எட்டாதவனும் அடியவர்களுக்குக் கையாளாக இருப்பவனும் ஒரு காலத்தில் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்தவனுமான பெருமான் அரங்கமா நகரில் அமர்ந்துள்ளான்*

* *அடியார்களின் நெஞ்சினில் உகந்துறைபவன் அரங்கன்.*

***பொன்னுமாமணியும் முத்தமும் சுமந்து**
**பொருதிரை மாநதி புடைசூழ்ந்து**
**அன்னமாடுலவும் அலைபுனல்சூழ்ந்த**
**அரங் மா நகரமர்ந்தானை**
**மன்னுமாட மங்கையர் தலைவன்**
**மானவேற் கலியன் வாயொலிகள்,**
**பன்னிய பனுவல் பாடுவார், நாளும்**
**பழவினை பற்றறுப்பாரே.** (10)

*பொன்னும் மணியும் முத்தும் கொழித்துக்கொண்டு அலையெறிந்து கரைபுரண்டு ஓடிவரும் காவேரி நதியால் சூழப்பட்டதும், அன்னப் பறவைகள் விளையாடுகின்ற சந்திரபுஷ்கரிணி முதலிய தீர்த்தங் களால் சூழப்பட்டதுமான திருவரங்கத்தில் திருக்கண் வளரும் பெருமானைக் குறித்துக் கையில் வேலினைக் கொண்ட திருமங்கை மன்னன் அருளிய இப்பாசுரங்களைப் பாடுவோர் எந்நாளும் தீவினையற்றிருப்பர்.*

**பொன்னும் மாமணியும், முத்துக்களும் என்கிற சொற் றொடர், ஸ்ரீரங்கநாச்சியார், திருவரங்கன், ஆழ்வாராசாரியர்கள் சேர்ந்து வாழும் இடம் திருவரங்கம் என்பதை உணர்த்துகிறது.*

*அடிவரவு :- பண்டை இந்திரன் மன்னு மாயிரும் எங்ஙனே ஆயிரம் சுரி ஊழி பேயினார் பொன்னும் ஏழை.*

*ப—5.*

## ஆறும்பத்து—ஏழாம் பத்தாம் திருமொழி.
### பெடையடர்த்த மடவன்னம்.

(திருமங்கையாழ்வார் நூறு பாசுரங்களால் திருநறையூர் நம்பியின் பெருமைகளையும், திவ்யதேச வளத்தையும் அநுபவிக்கிறார். திருநறையூர் நம்பியைத் திருவுள்ளத்தில் கொண்டு திருவிண்ணகர் எம்பெருமானைக் 'கோனே குறுங்குடியுள் குழகா! திருநறையூர்த் தேனே' என்றார் கீழ். அந்தத் தேன் பெருக்கே வெள்ளமிட்டுக் கரை புரண்டு ஓடுகிறது.

ஆழ்வார் பரமபதம் செல்லப் பாரித்தார், 'ஆழ்வீர்! பரம பதத்தைப் போன்று அர்ச்சாவதாரத்தலங்கள் இங்கே இருக்கும் போது அங்கே செல்லத் துடிப்பதேன்? திருநறையூரின் இனிமையைப்பாரும்' என்று எம்பெருமான் கூறினான். திருநறையூரை அநுபவிக்கத் தொடங்கி, இப்பதிகத்தால் தன் நெஞ்சுக்குச் சில உபதேசங்களைச் செய்கிறார். நெஞ்சே! 'திருநறையூர் நம்பியின் திருவடிகளையே அடைந்திடு' என்கிறார் (திருக்குடந்தையை அடுத்த நாச்சியார் கோயிலுக்குத் திருநறையூர் என்று பெயர். இது நீளாதேவிக்கு ப்ரதானமான (தனிச்சிறப்புடைய இடம் .

*** பெடையடர்த்த மடவன்னம் பிரியாது. மலர்க்கமலம்**
**மடலெடுத்து மதுநுகரும் வயலுடுத்த திருநறையூர்.**
**முடையர்த்த சிரமேந் திமூவுலகும் பலிதிரிவோன்,**
**இடர்கெடுத்த திருவாளன் இணையடியே அடைநெஞ்சே!** (1)

முடைநாற்றம் மிகுந்த பிரம்மகபாலத்தைக் கையில் ஏந்தி மூவுலகும் பிச்சையெடுத்துத்திரிந்த சிவபிரானின் சாபத்தை நீக்கியவன் திருமால் (எம்பெருமான்). அன்னப்பறவை பேடையோடு (தாமரையின் மேலமர்ந்து) தாமரை இதழ்களை விரித்துத்தேனைப் பருகும் இடம் திருநறையூர். அந்த எம்பெருமான் கழனிகள் சூழ்ந்த இவ்வூரில் வாழ்கிறான். நெஞ்சமே! அவனது திருவடிகளையே அடைந்திடு.

* சாபம் தீர்ப்பவன் திருநறையூர் நம்பி.

**கழியாரும் கனசங்கம் கலந்தெங்கும் நிறைந்தேறி**
**வழியார முத்தீன்று வளங்கொடுக்கும் திருநறையூர்.**
**பழியாரும் விறலரக்கன் பருமுடிகளவை சிதற.**
**அழலாரும் சரந்துரந்தான் அடியிணையே அடைநெஞ்சே!** (2)

போரில் நெருப்புப் போன்ற அம்புகளைச் செலுத்திப் பலமிருந்த வலிய இராவணனின் பத்துத் தலைகளையும் அறுத்துச் சிதற வைத்தவன் இராமன் அவன், உப்புக்கழியிலுள்ள சங்குகள் எல்லா இடங்களிலும் வந்து சேர்ந்து, வரிசை வரிசையாக இருந்து தெருவெல்லாம் முத்துக்களை அளித்துச் செல்வத்தைத் தரும் திருநறையூரில் வாழ்கிறான். ஏ! நெஞ்சே! அவனது அடியிணைகளையே அடைந்திடு.

* ஸத்வ குணம் நிரம்பிய பெரியோர்கள் வாழும் திருவீதிகளையுடையது திருநறையூர்.

**சுளைகொண்ட பலங்கனிகள் தேன்பாய. கதலிகளின்**
**திளை கொண்ட பழங்கெழுமு திகழ்சோலைத் திருநறையூர்.**
**வளை கொண்ட வண்ணத்தன் பின்தோன்றல். மூவுலகோடு**
**அளைவெண்ணெயுண்டான் தன் அடியிணையே அடைநெஞ்சே! (3)**

சங்குபோல் வெண்மைநிறம் கொண்ட பலராமனுக்கு (நம்பி மூத்த பிரானுக்குத்) தம்பியாகப் பிறந்தவன் கண்ணன். இவன் தயிரையும் வெண்ணெயையும் அமுது செய்தவன்; ஊழிக்காலத்தில் மூவுலகங்களை உண்டவன். தேன்பெருகும் பலாப் பழங்களையுடையபலாமரங்களையும், திரள் திரளாகப் பழுத்துத் தொங்கும் வாழைப் பழக் குலைகளைக் கொண்ட வாழை மரங்களையும் உடையசோலைகள் சூழ்ந்த திருநறையூரில் அவன் வாழ்கிறான். நெஞ்சே! அவனது அடியிணைகளை அடைந்திடு.

* கண்ணனாக அவதரித்தவன் திருநறையூர் நம்பி

**துன்றோளித் துகிற்படலம் துன்னியெங்கும் மாளிகை மேல்.**
**நின்றாரவான் மூடும் நீள் செல்வத்திருநறையூர்.**
**மன்றாரக்குடமாடி வரையெடுத்து மழை தடுத்த**
**குன்றாரும் திரள்தோளன் குரைகழலேஅடைநெஞ்சே! (4)**

குடக்கூத்து ஆடியவனும், கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்து மழைதடுத்தவனும், மலைபோன்ற திருத்தோள்களையும் கொண்டவன் கண்ணன் அவன், வானத்தையும் மறைக்கும் கொடிகளைக்கொண்ட மாளிகைகளையுடைய திருநறையூரில் வாழ்கிறான் மனமே! வீரக்கழல் பொருந்திய அவனது கழலிணைகளையே அடைந்திடு.

* அடியார்களின் துன்பத்தை நீக்கும் திருவுருடைய மாயன் திரு நறையூர் நம்பி.

**அகிற்குறடும் சந்தனமும் அம்பொன்னு மணிமுத்தும்.**
**மிகக் கொணர்ந்து திரையுந்தும் வியன்பொன்னித் திருநறையூர்.**
**பகல் கரந்த சுடராழிப் படையான் இவ்வுலகேழும்**
**புகக் கரந்த திருவயிற்றன் பொன்னடியே அடைநெஞ்சே (5)**

*அகில், சந்தனம், பொன் முத்துக்கள் ஆகியவற்றைத் திரட்டிக் கொண்டு காவிரியாறு பாய்கின்ற திருநறையூரில், அபிமன்யுவைக் கொன்ற ஜயத்ரதனை அருச்சுனன் கொல்வதற்கு உதவியாகச் சக்கரத்தால் சூரியனை மறைத்தவனும், முன்பொருகால் ஊழி வெள்ளத்தில் அழிந்திடாதபடி உலகங்களைத் தன் வயிற்றில் அடக்கிக் கொண்டவனுமான எம்பெருமான் எழுந்தருளி இருக்கிறான். நெஞ்சே! அவனதுபொற்றாமரையடிகளை அடைந்திடு.*

* *உலகமுண்ட பெருவாயன் திருநறையூர் நம்பி.*

**பொன் முத்துமரியுகிரும் புழைக்கைம்மா கரிக்கோடும்**
**மின்னத்தண்திரையுந்தும் வியன்பொன்னித் திருநறையூர்.**
**மின்னொத்த நுண்மருங்குல் மெல்லியலைத் திருமார்பில்**
**மன்னத்தான் வைத்துகந்தான் மலரடியே அடைநெஞ்சே! (6)**

*மேற்கே மின்னல் தோன்றியதுமே, பொன், முத்து சிங்க நகங்கள், யானைத் தந்தம் ஆகியவற்றைக் கொண்டுவந்து கொழிக்கும் காவிரியாறு பாயப் பெற்ற திருநறையூரில், மின்னொத்த நுண்ணிடையாளாகிய பெரிய பிராட்டியாரைத் திருமார்பில் கொண்டு எம்பெருமான் உகந்து எழுந்தருளி இருக்கிறான். நல்ல நெஞ்சே! அவரது மலரடிகளையே அடைந்திடுவாயாக.*

* *ஸ்ரீய:பதியான ஸ்ரீமந்நாராயணனையே எப்போதும் சிந்திக்கவேண்டும்.*

**சீர்தழைத்த கதிர்ச்செந்நெல் செங்கமலத்திடையிடையின்**
**பார்தழைத்துக் கரும்போங்கிப் பயன் விளைக்குந்திருநறையூர்.**
**கார் தழைத்த திருவுருவன் கண்ணபிரான் விண்ணவர்கோன**
**தார் தழைத்த துழாய்முடியன் தளிரடியே அடைநெஞ்சே! (7)**

*அழகிய கதிர்களைக் கொண்ட செந்நெற்பயிர்களும், அவற்றை யடுத்துச் செந்தாமரை மலர்களும் விளங்க, அவற்றின்*



செல்வத்தென்சேறை எம்பெருமான் ஸாரநாதன், திருச்சேறை.

*[illegible] கின்ற திருநறையூரில், காளமேகத் திருமேனியனும், தேவாதி தேவனும், திருத்துழாய் மாலையைத் திருமுடியில் அணிந்தவனுமாகிய எம்பெருமான் எழுந்தருளி இருக்கிறான் நெஞ்சே அவனது திருவடிகளையே அடைந்திடு*

* *நீலமேனியனும், திருத்துழாய் மாலையனுமாக இருப்பவனே தேவாதி தேவன்*

*** குலையார்ந்த பழுக்காயும பசுங்காயும பாளை முத்தும்**
**தலையார்ந்த விளங்கமுகின தடஞ்சோலைத் திருநறையூர்**
**மலையார்ந்த கோலஞ் சேர் மணிமாடம் மிகமன்னி**
**நிலையார நின்ருன தன நீள்கழலே யடைநெஞ்சே! (8)**

*திருநறையூர்ச்சோலைகளில் இளைய பாக்குமரங்கள் நிரம்பியுள்ளன அவற்றின் தலைகளில் பழுத்த காய்களும், பழுக்கப் போகிற காய்களும் பாளை முத்துக்களும் குலைகுலையாகக் குவிந்து கிடக்கின்றன. வளம்மிக்க இவ்வூரிலுள்ள மணிமாடக் கோயிலில் (கற்பக மரம் போல்) நிற்கிருன் எம்பிரான் அவனது நீள்கழலை (நீண்டகழல்களை) ஏ! நெஞ்சே! நீ அடைந்திடு.*

* *நம்பியைப் போலவே பாக்கு மரங்களும் ஓங்கி வளர்ந்து நின்று பயன் தருகின்றன,*

**மறையாரும் பெருவேள்விக் கொழும் புகை போய்வளர்ந்து, எங்கும்**
**நிறையார வான்மூடும் நீள்செல்வத் திருநறையூர்.**
**பிறையாரும சடையானும் பிரமனு முன் தொழுதேத்த**
**இறையாகி நின்ருன் தன் இணையடியே அடைநெஞ்சே! (9)**

*மறைகளில் சொல்லப்பட்ட யாகயக்ஞங்களை (வேள்விகளையும் ஹோமங்களையும்) வைதிக அந்தணர்கள் செய்கிருர்கள். அங்கிருந்து கிளம்பிய வேள்விப்புகை எல்லா இடங்களிலும் நிறைந்து வானத்தையே மறைக்கிறது அப்படிப்பட்ட திருநறையூரில் பிரமனும் சிவனும் (மற்றுமுள்ள தேவர்களும்) பணிந்து போற்றும்படி எம்பெருமான் எழுந்தருளி இருக்கிருன். நெஞ்சே! அவனுடைய இணையடிகளையே அடைந்திடு.*

*இறை என்ற சொல்லுக்கும் இறைவன் என்ற சொல்லுக்கும் உரியவன் ஸ்ரீமந்நாயணன் ஒருவனே.*

***திண்களக மதிள்புடைசூழ் திருநறையூர் நின்றானை**
**வண்களக நிலவெறிக்கும் வயல்மங்கை நகராளன்.**
**பண்களகம் பயின்றசீர்ப் பாடலிவை பத்தும் வல்லார்**
**விண்களகத் திமையவராய் வீற்றிருந்து வாழ்வாரே. 10.**

*வலிமைமிக்கதாகச் சுண்ணும்புச் சாந்து இடப்பெற்ற மதிள்களால் சூழப்பட்ட திருநறையூரில் எழுந்தருளி இருக்கும் நம்பியெம்பெருமானைப்பற்றி அன்னப் பறவைகள் நிறைந்த கழனிகள் சூழ்ந்த திருமங்கை நாட்டின் தலைவரான ஆழ்வார் அருளிய இப்பத்துப் பாசுரங்களையும் சொல்லவல்லவர்கள், பரமபதத்தில் சென்று நித்யஸூரிகளோடு சேர்ந்து எம்பெருமானை அநுபவிப்பார்கள்.*

*பிரஹ்மாநுபவத்தை அளிக்கவல்லது இத்திருமொழி.*

*அடிவரவு :—பெடை கழி சுளை துன்று அகில் பொன் சீர் குலை மறை திண் கிடந்த.*

# ஏழாம் பத்து—நான்காம் திருமொழி.
## கண்சோர வெங்குருதி.

இது திருச்சேறைத்திருப்பதியைப் பற்றிய மங்களாசாஸனப் பதிகம். 'எம்பெருமானுக்கு அடிமைப்படுவதைக் காட்டிலும் அடியார்களுக்கு அடிமைப்படுவதே சிறந்தது' என்ற அரிய கருத்தைத் திருவுள்ளத்தில் கொண்ட திருமங்கையாழ்வார் அடியார்களிடம் அன்பு செலுத்துவதில் தாம் ஊன்றிய படியை இத்திருமொழியில் அருளிச்செய்கிறார். திருச்சேறை எம்பெருமானை 'ஸ்ரீ ஸாரநாதப் பெருமாளை) இடைவிடாமல் சிந்திக்கும் அடியார்களே என்னால் விரும்பத்தக்கவர்கள்; எப்போதும் நினைக்கத்தக்கவர்கள் என்று கூறுகிறார். கீழ் நண்ணுதவாளவுணர் என்ற திருக்கடல்மல்லைப் பதிகத்திலும் பாகவத நிஷ்டை வெளியிடப் பட்டுள்ளது.

***கண்சோர வெங்குருதி வந்திழிய வெந்தழல்போல் கூந்தலாளை**
**மண்சேர முலையுண்ட மாமதலாய்! வானவர்தம் கோவேயென்று,**
**விண்சேரு மிளந்திங்களகடுரிஞ்சு மணிமாடமல்கு, செல்வத்**
**தண்சேறை யெம்பெருமான் தாள் தொழுவார் காண்மின் என்தலை**
**மேலாரே. (1)**

கண்கள் சுழன்று இரத்தம் வெள்ளமிட்டுப் பெருகி மாண்டு போகும்படி செம்பட்ட மயிரையுடைய பூதனையின் முலையுண்ட இளம்பிள்ளையே! தேவர்கள் தலைவனே!' என்று வானளாவிய திருமாளிகைகள் நிரம்பிய திருச்சேறையில் இருக்கும் ஸாரநாதப் பெருமாளின் திருவடிகளை வணங்குமவர்கள் என்தலைமேல் வீற்றிருக்க உரியவர்களாவர்.

* ஸ்ரீஸாரநாதப் பெருமாளை 'மாமதலைப்பிரான்' என்று கூறுவது வழக்கம்.

**அம்புருவ வரிநெடுங்கண் அலர்மகளை வரையகலத்தமர்ந்து, மல்லல்**
**கொம்புருவ விளங்கனிமேல் இளங்கன்று கொண்டெறிந்த கூத்தர்**
**போலாம்.**
**வம்பலரும் தண்சோலை வண்சேறை வானுந்து கோயில்மேய**
**எம்பெருமான் தாள்தொழுவார் எப்பொழுதும் என்மனத்தே**
**இருக்கின்றாரே. (2)**

அழகிய புருவத்தையும் நீண்ட கண்களையுமுடைய பெரியபிராட்டியைத் திருமார்பில் அமரவைத்திருப்பவனும் விளங்கனிமேல்

*வத்ஸாஸுரனை (கன்று வடிவத்தில் வந்த அசுரனை) வீசியெறிந்தவனும் நடையழகை உடையவனும் நறுமணம் வீசும் திருச்சேறையில் எழுந்தருளி இருப்பவனுமான ஸாரநாதப் பெருமாளின் திருவடிகளை ஸேவிப்பவர்கள் எப்பொழுதும் என் நெஞ்சிலேயே வாழ்கிறார்கள்.*

** திருநாரணன் தாள் தொழுவாரை சிந்தித்துய்ம்மின்.*

**மீதோடி வாளெயிறு மின்னிலக முன்விலகு முருவினளை**
**க்காதோடு கொடிமூக்கன் றுடனறுத்த கைத்தலத்தா வென்றுநின்று,**
**தாதோடு வண்டலம்பும் தண்சேறையெம் பெருமான தாளையேத்தி**
**போதோடு புனல்தூவும் புண்ணியரே விண்ணவரில் பொலிகின்றாரே (3)**

*எதிரில் வந்து நின்ற சூர்ப்பணகை என்ற அரக்கியின் காதையும் மூக்கையும் அறுத்த திருக்கையை உடையவனே! என்று கூறிக் கொண்டு வண்டொலிக்கும் தண்சேறையிலுறையும் ஸாரநாதனின் திருவடிகளை, மலரும் புனலும் (தீர்த்தமும்) இட்டு வணங்குவோர் தேவர்களைக் காட்டிலும் மேம்பட்டோராவர்.*

** ஸாரநாதனைத் தொழுவோர் விண்ணுளாரிலும் சீரியரே.*

**தேராளும் வாளரக்கன் தென்னிலங்கை வெஞ்சமத்துப் பொன்றிவீழ**
**போராளும்சிலையதனால் பொருகணைகள் போக்குவித்தா யென்று,நாளும**
**தாராளும் வரைமார்பன் தண்சேறை யெம்பெருமான் உம்பராளும்**
**பேராளன் பேரோதும் பெரியோரை யொருகாலும் பிரிகிலேனே. (4)**

*பெரிய தேர்வீரனான இராவணனுடைய படைவீடான அழகிய இலங்கை சிதறியழிந்து போகும்படிப் போரில் கொடிய அம்புகளைச் செலுத்திய பெருவீரனே! என்று சொல்லித் தினந்தோறும, திருமாலையணிந்த திருமார்பையுடையவனும் மேலுலகங்களை ஆள்பவனுமான திருச்சேறை யெம்பெருமானின் பெயர்களையே வாயாரப்பாடும் பெரியோர்களை ஒருபோதும் பிரியமாட்டேன்*

** இப்படிப்பட்ட பெரியோரை 'ஸ' மஹாத்மா ஸுதுர்லப: என்றான் கண்ணன் கீதையில்.*

**வந்திக்கும் மற்றவர்க்கும் மாசுடம்பில் வல்லமணர்தமக்கு மல்லேன்**
**முந்திச்சென் றரியுருவாய் இரணியனை முரணழித்த முதல்வர்க்கல்லால்**
**சந்தப்பூ மலர்ச்சோலைத் தண்சேறையெமபெருமான் தாளை, நாளும்**
**சிந்திப்பார்க் கென்னுள்ளம் தேனூறி எப்பொழுதும் தித்திக்குமே. (5)**

*நரசிம்மனாக அவதரித்து இரணியனின் வலிமையைப் பாழ்படுத்திய ஸாரநாதப் பெருமாளையே சிந்திக்கும் அடியார்களின்*

திறத்திலேயே என்மனம் ஊன்றி தேனூறித் தித்திக்குமே யல்லது அழுக்கேறிய உடம்புடன் வலிந்து வாது செய்யவரும் ஜைனர் களுக்கும், 'வந்தே' என்றுசொல்லித் திரியும் பௌத்தர்களுக்கும் கட்டுப்படக்கடவேன் அல்லேன்.

* புத்தரைப்பற்றிய ஸ்தோத்திரங்களில் 'வந்தே' என்றசொல் மிகையாகக் காணப்படும்.

**பண்டேனமாய் உலகையன்றிடந்த பண்பாளா வென்றுநின்று**
**தொண்டானேன் திருவடியே துணையல்லால்துணையிலேன்**
**சொல்லுகின்றேன்.**
**வண்டேந்தும் மலர்ப்புறவில் வண்சேறை யெம்பெருமானடியார் தம்மை**
**கண்டேனுக்கிதுகாணீர்என்னெஞ்சும்கண்ணிணையும்களிக்குமாறே (6)**

'முன்னொருநாள் வராஹாவதாரத்தை மேற்கொண்டு அண்ட பித்தியில் சேர்ந்திருந்த பூமியை விடுவித்துக் கொண்டுவந்த நீர்மையையுடையவனே! உன் திருவடிகளுக்கே அடிமையானேன்; வேறு துணையுடையேன்அல்லேன்; இதுஉண்மை, என்று சொல்லிக் கொண்டிருக்கும், ஸாரநாதனின் அடியார்களை ஸேவித்து என் நெஞ்சும் கண்களும் களிப்பதைப் பாருங்கள்.

* மஹான்களைக் காண்பதே கண்படைத்த பயனாகும்.

**பைவிரியும்வரியரவில் படுகடலுள் துயிலமர்ந்த பண்பாவென்றும்**
**மைவிரியும் மணிவரைபோல் மாயவனே என்றென்றும், வண்டார்நீலம்**
**செய்விரியும்தண்சேறையெம்பெருமான்திருவடியைச்சிந்தித்தேற்குஎன்**
**ஐயறிவும் கொண்டானுக்காளானார்க்காளாம் என். அன்புதானே. (7)**

பாற்கடலுள் திருவனந்தாழ்வான்மீது திருக்கண்வளரும் நீர்மையை உடையவனே! என்றும், மணிமலை போல் வடிவுடை யவனே! மாயவனே! என்று பலகால் சொல்லி, தண்சேறை எம் பெருமானின் திருவடிகளையே சிந்திக்கும் என்னுடைய ஐம்புலன் களறிவையும் தன்வசமாக்கிக் கொண்ட அப்பெருமானுக்கு ஆட்பட்டவர் எவரோ, அவர்கள் திறத்திலேயே என் அன்பு பெருகுகிறது.

*என் அன்புக்குரிய அடியார்கள் பற்றும் தெய்வம் ஸ்ரீஸார நாதன் என்பது ஆழ்வாரின் திருவுள்ளம்.

**உண்ணாதுவெங்கூற்றம் ஓவாது பாவங்கள்சேரா. மேலை**
**விண்ணோரும் மண்ணோரும் வந்திறைஞ்சும்மென்தளிர்போலடியினானை.**
**பண்ணார வண்டியம்பும் பைம்பொழில்சூழ் தண்சேறையம்மான் தன்னை**
**கண்ணாரக் கண்டுருகிக் கையாரத் தொழுவாரைக் கருதுங்காலே. (8)**

விண்ணவரும் மண்ணவரும் கிட்டி வணங்கும் மலரடிகளைக் கொண்ட, சோலேசூழ் திருச்சேறையில் உள்ள ஸாரநாதப் பெருமாளைக் கண்ணாரக்கண்டும் கைகளால் ஆரத்தொழுதேத்தும் ஸ்ரீவைஷ்ணவர்களை (அடியார்களை) நினைத்த மாத்திரத்தில் மரண பயமும் பாவமும் கிட்டமாட்டா.

* ஸாரநாளின் அடியார்களைச் சிந்தனை செய்மனமே!

**கள்ளத்தேன்பொய்யகத்தேனுதலால் போதருகால் கவலையென்னும்**
**வெள்ளத்தேற்கு என்கொலோ விளைவயலுள் கருநீலம் களைஞர்தாளால்**
**தள்ள, தேனமணநாறும் தண்சேறையெம்பெருமான் தாளை,நாளும்**
**உள்ளத்தேவைப்பாருக்கு இதுகாணீ ரென்னுள்ளம் உருகுமாறே. (9)**

களைபிடுங்கிப போடும் உழவர்களால் வயலிலுள்ள கருநெய்தல் உதைதது ஒதுக்கப்பட்டுள்ளன. அவற்றிலிருந்து பெருகும் தேனின் மணம் வீசும் திருச்சேறையில் எழுந்தருளியுள்ள எம்பெருமானைச் சிந்திக்கும் அடியார்களை நினைத்து என்மனம் உருகுவதைப் பாருங்கள். ஆத்மாபஹாரகனும் வஞ்சநெஞ்சை யுடையவனுமாக நான் இருப்பதால் துன்பக் கடலில் அழுந்திக் கிடக்கிறேன் ஸாரநாதனின் அடியார்களை நினைக்கும் பேறு எனக்கு எப்படி வாய்த்ததோ! தெரியவில்லையே.

*பகவானை நினைப்பதுபோல் பாகவதர்களை (அடியார்களை) நினைப்பதும் பெரிய பாக்கியமாகும்

***பூமாண்சேர் கருங்குழலார்போல்நடந்து வயல்நின்ற பெடையோடு, அன்னம்**
**தேமாவினின்னிழலில்கண்டுயிலும் தண்சேறையம்மான்தன்னை,**
**வாமான்தேர்ப் பரகாலன் கலிகன்றியொலிமாலை கொண்டுதொண்டீர்**
**தூமாண்சேர் பொன்னடிமேல் சூட்டுமின் நுந்துணைக்கையால் தொழுது நின்றே. (10)**

அன்னப்பறவைகள், கரிய கூந்தலையுடைய இளம்பெண்களைப் போல், (பேடைகளோடு) நடந்து வந்து இனிய மாமரத்தின் நிழலில் கண்ணுறங்கும் இடம் திருச்சேறை. இங்கு எழுந்தருளி இருக்கும் எம்பெருமானைப்பற்றி, தாவி ஓடிவரும் குதிரைகள் பூட்டிய தேரினைக்கொண்ட திருமங்கையாழ்வார் அருளிய சொல் மாலைகளைக் கூப்பிய கைகளால் வணங்கி ஸ்ரீஸாரநாதனின் திருவடிகளில் சூட்டுங்கள்.

*சூட்டும் நன்மாலை ஆழ்வாரின் சொல்மாலை.

அடிவரவு —கண் அம்பு மீதோடி தேராளும் வந்திக்கும் பண்டு பைவிரியும் உண்ணுது கள்ளத்தேன் பூமாண் தந்தை

# எட்டாம்பத்து—இரண்டாம் திருமொழி.

## தெள்ளியீர் தேவர்க்கும.

பரகால நாயகியின் நிலைமையைக் கண்ட தாயார், 'இவள் கண்ணபுரத்தெம்மானைக் கண்டிருக்க வேண்டும்' என்று கீழ்த்திரு மொழியில் அறிந்தாள். இத்திருமொழியில் திருக்கண்ணபுரத்துப் பெருமானையே நேராகப்பார்த்துத் தன் பரிதாபத்தைப் பேசத் தொடங்கித் தனக்குத்தானே மனம்நொந்து கொண்டு பேசுகிறுள்.

திருமங்கையாழ்வார் (ஆழ்வார்) சௌரிராஜப் பெருமாளிடம் தனக்கு உண்டான அன்பு மேலீட்டையும் அவரைபிரிந்தபடி யால் தன் உடல் மெலிந்து போயிற்று என்பதையும் அருளிச் செய்கிறுர்.

***தெள்ளியீர்! தேவர்க்கும் தேவர் திருத்தக்கீர்!**
**வெள்ளியீர்! வெய்ய விழுநிதிவண்ணர், ஓ!**
**துள்ளுநீர்க் கண்ணபுரம் தொழுதாளிவள்**
**கள்வியோ! கைவளைகொள்வது தக்கதே!** (1)

*தெளிந்த அறிவுடையவரே! அமரர்க்கு அதிபதியாகத் திகழ்பவரே! பெரியபிராட்டியாரைத் திருமார்பில் கொண்டவரே! சுத்தமான (தூய) சுபாவத்தோடு இருப்பவரே! எல்லோரும் விரும்பும் பொன் நிறமேனியரே! இவ்வளவு பெருமை பெற்றிருந்தும் நீர் செய்யும் செயல் விநோதமாக இருக்கிறதே! என் மகள் என்ன தவறு செய்து விட்டாள்? கண்ணும் கண்ணீருமாக இருந்துகொண்டு திருக் கண்ணபுரத்தைக் கைகளால் தொழுதுவணங்கினுள். இவள் ஆத்மாபஹாரம் செய்யவில்லையே! 'தொழுதாள்' என்பதையே காரணமாகக் கொண்டு *அவளுடைய கைவளைகளைக் கொள்ளை கொண்டீரே! இது உமக்குத் தகுமோ! தொழுத இவள் கள்வி அல்லள்; கைவளை கொண்ட நீரே கள்வர்!*

* *பகவானைக் கைகூப்பி வணங்குவதே கைகளுக்கு அணியாகும்.*

***நீணிலா முற்றத்து நின்றிவள்நோக்கினுள்.**
**காணுமோ கண்ணபுரமென்றுகாட்டினுள்**
**பாணனூர் திண்ணமிருக்க இனியிவள்**
**நாணுமோ? நன்றுநன்று நறையூரர்க்கே,** (2)

நான் என்மகளாகிய பரகாலநாயகியைக் காப்பாற்ற நினைத்தேன். திருக்கண்ணபுரத்தெம்பெருமான் மீது கொண்டிருக்கும் (மனத்தை) எண்ணத்தைச் சிறிதுநேரம் மாற்றுவோம் என்று எண்ணி மனிதர்களின் நடமாட்டமே இல்லாத ஒரு இடத்திற்கு அழைத்துச் சென்றேன்; வானளாவிய ஒரு மாளிகையில் இருக்கச் செய்தேன். சிறிது ஆறி இருக்கட்டும் என்று எண்ணினேன். இவள் அம்மாளிகையின் உயர்ந்த இடத்தில் (நீள் நிலாமுற்றத்தில்) ஏறி நின்றாள். அங்கிருந்து திருக்கண்ணபுரத்தைக் கண்டாள், தான் கண்டதுமன்றி, என்னையும் அழைத்து 'அதோ பார்! திருக்கண்ண புரம் தெரிகிறதா?' என்றாள். பகவத்விஷயத்தில் ஆழங்காற் படுத்தும் ஆசாரியரின் வலிமை இவளுக்கு இருக்கிறது. இவளை எப்படி அதிலிருந்து மீட்கமுடியும்? முதலில் இவள் திருநறையூர் நம்பியின் அழகு வலையில் சிக்கினாள். அவன் எண்ணமே நல்லதாக நிறைவேறியது.

*அறிவின் சிகரத்தில் ஆசார்யர் இருந்துகொண்டு, உபதேச முத்திரையால் (பகவத்விஷயத்தையும் அதற்கும்) மேம்பட்ட பாகவத விஷயத்தையும் உணர்த்துகிறார்.

***அருவிசோர் வேங்கடம் நீர்மலையென்றுவாய்**<br>
**வெருவினாள் மெய்யம் வினவி இருக்கின்றாள்.**<br>
**பெருகுசீர்க் கண்ணபுரமென்று பேசினாள்**<br>
**உருகினாள். உள்மெலிந்தாள் இதுவென்கொலோ? (3)**

என்மகள், அருவிசோர் வேங்கடமே! நீர்மலையே! என்று எப்போதும் வாய்வெருவுகிறாள். 'திருமெய்யம்' என்ற திவ்விய தேசம் இருக்கிறதே! 'எம்பெருமான் மெய்யனாகவே இருந்து அடியவர்களின் எண்ணங்களை நிறைவேற்றிவைத்த இடம் என்ற காரணத்தினால்தானே இந்த இடத்திற்குத் திருமெய்யம் என்ற பெயர் ஏற்பட்டது!' என்று அருகிலிருப்பவர்களைச் சிலநேரங்களில் கேட்கிறாள்; அவர்கள் பதில் சொல்லாமல் இருந்துவிட்டால் பெருமூச்சு விடுகிறாள். சிலசமயங்களில் 'திருக்கண்ணபுரம் என்று சொன்னால் நெஞ்சு தளர்ந்து நீர்ப்பண்டமாய் உருகுகிறாள். இவள் இப்படியெல்லாம் இருப்பதற்கு நான் என்ன பாபம் செய்தேனோ!' அறியேன்.

*'மெய்யர்க்கே மெய்யனாகும்', மெய்யனாகும் விரும்பித் தொழுவார்க்கெல்லாம்.

**உண்ணுமாளில்லை உறக்கமும தானில்லை**
**பெண்மையுஞ்சாலநிறைந்திலள் பேதைதான்**
**கண்ணனூர் கண்ணபுரம் தொழும் கார்க்கடல்**
**வண்ணர்மேல், எண்ணமிவட்கிதுவென்கொலோ?**

*என்மகள் ஒருநாளும் உண்பதில்லை; உறக்கமும் துறந்தாள். கணவனோடு கலவி செய்யும் பருவமுடையவளாக இருந்தால் ஊணும் உறக்கமும் தவிர்வது இயற்கை! அதுவும் இல்லை. இவளது பருவம் பேதைப் பருவமே. திருக்கண்ணபுரம் இருக்கும் திசை நோக்கிக் கைதொழுகிறாள் கண்ணபுரத்தில் கடல்தேங்கினாற் போல் இருக்கும் சௌரிப்பெருமாளின் திருமேனி நிறத்தையே எப்போதும் சிந்திக்கிறாளே! என்னே ஆச்சரியம்!*

* *மனோவாக் காயங்கள் எனப்படும் த்ரிகரணங்களையும் எம்பெருமாளிடத்திலேயே செலுத்த வேண்டும்.*

**கண்ணனூர் கண்ணபுரம் தொழும் காரிகை.**
**பெண்மையென்? தன்னுடையுண்மை உரைக்கின்றாள்.**
**வெண்ணெயுண்டாப்புண்ட வண்ணம்விளம்பினால்**
**வண்ணமும் பொன்னிறமாவதொழியுமே.** (5)

*கண்ணனாகிற சௌரிப்பெருமாளின் திவ்யதேசத்தைத் தொழுகின்ற என் பெண், தன் எண்ணங்களைச் சிறிதும் கூசாதே என்னிடம் வாய்விட்டுச் சொல்லுகிறாள். கண்ணன் வெண்ணெய் அமுதுண்டு கண்ணிநுண்சிறுத்தாம்பினால் கட்டுண்ட செய்தியைச் சொன்னால், மேனியின் பசலை நிறம் நீங்கி நல்ல நிறமாகும்படி அவ் வார்த்தையைக் கேட்டுமகிழ்கிறாள்.*

* *'கண்ணனூர் கண்ணபுரம் தொழும் காரிகை' என்று பெயர் பெற்றவள் பரகாலநாயகி.*

**வடவரைநின்றும் வந்து இன்று கணபுரம்**
**இடவகைகொள்வது யாமென்றுபேசினாள்.**
**மடவரல் மாதர் எனபேதை இவர்க்கிவள்**
**கடவதென்? கண்துயிலின்றிவர்கொள்ளவே.** (6)

*'வடக்குத் திருமலையாகிய திருவேங்கடமலையில் வாஸத்தை விட்டுக் கீழை வீடாகிய திருக்கண்ணபுரத்தில் நிலையாக வசிக்க இன்று*

இங்கு வந்து சேர்ந்திருக்கிறோம் என்கிறாள் என்மகள். மிகச் சிறியபருவமுடையவளும் அழகில் சிறந்தவளுமான இச்சிறுமியை உறக்கம் கெட்டு வருந்தவைப்பது இந்த சௌரிப்பெருமாளுக்குத் தகுமோ? (என்கிறாள் தாய்)

* அடியார்களை விட்டுப்பிரிந்த பகவானும் பகவானை விட்டுப் பிரிந்த அடியார்களும் தூங்கமாட்டார்கள்.

**தரங்க நீர்பேசினும் தண்மதிகாயினும்,**
**இரங்குமோ எத்தனைநாளிருந்தெள்கினாள்?**
**துரங்கம் வாய் கீண்டுகந்தானது தொன்மையூர்**
**அரங்கமே என்பது இவள் தனக்காசையே.** (7)

கடல்அலைகளைக் கொண்டு ஒலி செய்தாலும், குளிர்ந்த நிலா பால் போல் தெள்ளெனக் காய்ந்தாலும்; இவள் இளைப்பதில்லை, என் மகள் நெடுநாளாகவே இக்கஷ்டங்களை அனுபவித்துவருகிறாள். குதிரைவடிவில் வந்த கேசி என்ற அரக்கனை அழித்து, விரோதி நிரஸனம்செய்த எம்பெருமான் நிலையாக வாழும் திருவரங் கத்தை வாய்வெருவிக் கொண்டிருப்பதே இப்பெண்பிள்ளையின் ஆசையாகஇருக்கிறது.

*'வேங்கடமே வேங்கடமே' என்பதும், 'திருவரங்கம்' என்று வாய்வெருவதும் அடியார்களின் இயல்பு.

**தொண்டெல்லாம் நின்னடியே தொழுதுய்யுமா**
**கண்டு. தான் கணபுரந் தொழப்போயினாள்.**
**வண்டுலாங் கோதையென்பேதை மணிநிறம்**
**கொண்டுதான். கோயின்மை செய்வது தக்கதே.** (8)

'தொண்டர்கள் எல்லோரும் திருக்கண்ணபுரத்து எம்பெரு மானாகியஉனது திருவடிகளை வணங்கி உய்வு பெறுகிறார்கள், என்பதைப் பார்த்து என்மகள் தானும் அவ்வாறே ஆசைகொண்டு உன்னைத்தொழவந்தாள். வந்துதொழுதவளின் திருமேனி நிறத்தை அழிப்பதும் எல்லோருக்கும் தலைவனாகிய உனக்குத் தகுமோ?

*தொண்டெல்லாம் நின்னடியே தொழுதுய்யும்.

**முள்ளெயிறேய்ந்தில கூழை முடி கொடா**

**தெள்ளியள் என்பதோர் தேசில ளென்செய்கேன்.**

**கள்ளவிழ்ச் சோலைக் கணபுரம் கைதொழும்**

**பிள்ளையை, பிள்ளை என்று எண்ணப் பெறுவரே. (9)**

*என்மகளோ இளம்பெண்மகள்! பற்களும் பூர்ணமாக முளைக்க வில்லை. தலைமயிரும் சேர்த்து முடியும்படி வளரவில்லை. விவேக முடையவள் என்று சொல்லும்படி தேஜஸ் (ஒளி) உடையவளும் அல்லள். இவளுக்காக நான் என்ன செய்வது? சோலைசூழ் கண புரத்தை தொழும் இப்பிள்ளையை சாதாரணப் பெண்பிள்ளை (என் மகள்) என்று சொல்லிட முடியுமோ! கௌரவித்துப் பேச வேண்டாவோ!*

**பகவத்ஸம்பந்தம் பெற்றவர்களைக் கௌரவித்துப் பேசுதல் வேண்டும்.*

***கார்மலி கண்ணபுரத் தெம்மடிகளை**

**பார்மலி மங்கையர்கோன் பரகாலன்சொல்,**

**சீர்மலிபாடல் இவைபத்தும் வல்லவர்.**

**நீர்மலி வையத்து நீடுநிற்பார்களே! (10)**

*மேகங்கள் நிறைந்திருக்கும் திருக்கண்ணபுரத்திலுள்ள சௌரிப் பெருமாளைப்பற்றித் திருமங்கையாழ்வார் அருளிய இத்திரு மொழியை (இப்பதிகத்தை)க் கற்றுணரவல்லவர் பூமியில் நெடுங் காலம் வாழப் பெறுவர்.*

*அடிவரவு :—தெள்ளியீர், நீணிலா, அருவி உண்ணும், கண்ணன் வடவரை, தரங்கம், தொண்டு, முள், கார், கரை.*

## ஒன்பதாம்பத்து—ஒன்பதாம் திருமொழி.

### மூவரில் முன் முதல்வன்.

*[ஆழ்வார், மாலிருஞ்சோலை வணங்குதும் வா மட நெஞ்சே! என்று ஒருமுறைக்கு ஓன்பதுமுறை நெஞ்சை அழைத்தார். திருமாலிருஞ்சோலையை அநுபவித்த ஆழ்வார் தாமான தன்மையை இழந்து பிராட்டி நிலையை அடைகிறார் பரகால மாதா, தன் பெண் பரகால நாயகியின் நிலையைக் காண்கிறாள். அந்தோ! இவள் சுந்தரத் தோளுடையானை அணைந்தாலன்றித் தரிக்க மாட்டாள் போல் இருக்கிறதே! இவளுக்கு இந்த பாக்கியம் (இப்பேறு) கிடைக்குமா? அல்லது இப்படியே வருந்த வேண்டியவள் தானோ! என்று சிந்திக்கிறாள், 'அவனைக் காணப் பெறுவள்' என்று அறுதி இட்டு ஒருவாறு தரிக்கிறாள் இத்திருமொழியில்]*

***மூவரில்முன்முதல்வன் முழங்கார்கடலுட்கிடந்து.**
**பூவலருந்திதன்னுள் புவனம் படைத்துண்டுமிழ்ந்த**
**தேவர்கள் நாயகனைத் திருமாலிருஞ்சோலை நின்ற**
**கோவலர் கோவிந்தனைக் கொடியேரிடை கூடுங்கொலோ (1)**

*திரிமூர்த்திகளில் முதல்வனாய் (முழுமுதற்கடவுளும்) திருப்பாற்கடலில் கண்வளர்ந்தருளி, பிரமனைத் தன் உந்தியிலே தோற்றுவித்து, அவன் வழியாக உலகங்களை உண்டாக்கி ஊழிக்காலத்தில் உலகங்களை அடக்கிப் பிறகு வெளிப்படுத்துவதாகிற அலகிலா விளையாட்டுடைய எம்பெருமான், நித்யஸூரிகளுக்குத் தலைவன். கிருஷ்ணவதார ஸௌலப்யத்தைக் காட்டிக்கொண்டு திருமாலிருஞ்சோலையில் வந்து நிற்கிறான். அவனை அணைவதாகிற என்மகளின் ஆசை நிறைவேறுமா?*

**முதலாவார் மூவர், அம்மூவருள்ளும் முதலாவான் மூரிநீர் வண்ணன்.*

**புனைவளரப் பூம்பொழிலார் பொன்னிசூழரங்கநகருள்**
**முனைவனை, மூவுலகும் படைத்த முதல்மூர்த்திதன்னை.**
**சினைவளர்பூம்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலை நின்றான்**
**கனைகழல்காணுங்கொலோ? கயற்கண்ணியெம் காரிகையே. (2)**

*புன்னைமரப் பூஞ்சோலைகளையுடையதாய், காவிரியால் சூழப்பட்டிருக்கும் திருவரங்கம் பெரிய கோயிலில் திருக்கண்*

பவனும், மூவுலகுக்கும் காரணனாய் இருப்பவனும், மூவுலகும் படைத்த முக்கிய மூர்த்தியானவனுமான எம்பெருமான் சோலை சூழ்திருமாலிருஞ்சோலையில் நிற்கிறான். இவனுடைய திருவடிகளைக் காணவேண்டும் என்று ஆசைப்படும் என்மகளின் ஆசை நிறைவேறுமா?

* அழகரின் திருவடிகளைக் காண ஆசைப்படுகிறாள் கயற்கண்ணி.

**உண்டுலகேழினையும் ஒரு பாலகன் ஆலிலைமேல்**
**கண்டுயில் கொண்டுகந்த கருமாணிக்க மாமலையை**
**திண்டிறல் மா கரிசேர் திருமாலிருஞ்சோலை நின்ற**
**அண்டர் தங்கோவினை இன்று அணுகுங்கொல்? என்ஆயிழையே! (3)**

ஊழிக்காலத்தில் எல்லா உலகங்களையும் வயிற்றினுள் அடக்கிச் சிறுகுழவியாய் ஆலிலைமேல் கண்வளர்ந்து மகிழ்ந்த கருமாணிக்க மலைபோன்ற எம்பெருமான், யானைகள் மிகுந்த திருமாலிருஞ் சோலை மலையில் வந்து நிற்கிறான். உயர்ந்த அணிகளை அணிந்திருக்கும் அழகியான என்மகள் தேவாதிதேவனாகிற அழகரை அணுகப் பெறுவளோ?

* ஆலினிலையானே மாலிருஞ் சோலையான்.

**சிங்கமதாயவுணன் திறலாகம் முன் கீண்டுகந்த**
**பங்கய மாமலர்க்கண் பரனை எம்பரஞ்சுடரை.**
**திங்கள் நன்மாமுகில் சேர் திருமாலிருஞ் சோலை நின்ற**
**நங்கள்பிரானை இன்று நணுகுங்கொல் என் நன்னுதலே. (4)**

முன்பு ஒரு காலத்தில் பரமபக்தனான பிரகலாதனுக்குப் பல தீங்குகள் செய்த இரணியனின் உடலை நரசிங்கமாய்த் தோன்றிக் கிழித்து அழித்தவனும், அதனால் திருவுள்ளமுவந்தவனும், தாமரை போன்ற கண்களையுடையவனும், எல்லோரையும் காட்டிலும் மேலானவனும், பரஞ்சோதி ஸ்வரூபியாக விளங்குபவனும், எனக்குத் தலைவனுமாகிய எம்பெருமான் வானோங்கிய சிகரத்தையுடைய திருமாலிருஞ்சோலையில் நிற்கிறான். அழகிய நெற்றியையுடைய என்மகள் அவனோடு சேர்ந்திடுவளோ!

* அழகியசிங்கரே திருமாலிருஞ்சோலைமலைப் பெருமான்.

**தானவன் வேள்விதன்னில் தனியே குறளாய் நிமிர்ந்து**
**வானமும் மண்ணகமுமளந்த திரிவிக்கிரமன்**
**தேனமர் பூம்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலை நின்ற**
**வானவர் கோனை இன்று வணங்கித் தொழுவல்லள் கொலோ? (5)**

*அசுரகுலத்தில் பிறந்த மகாபலியின் வேள்விச் சாலைக்கு வாமனனாய்ச் சென்று மகாபலியிடம் மூவடிமண் கேட்டு (பெற்று) திரிவிக்கிரமனாக ஓங்கி (மண்ணும் விண்ணும்) உலகளந்த எம்பெருமானே. பூம்பொழில் நிறைந்த திருமாலிருஞ்சோலையில் நிற்கிறான். அப்படிப்பட்ட தேவாதிதேவனைக் கிட்டி என்மகள் வணங்கப் பெறுவளோ?*

** திருமாலிருஞ்சோலை அழகரே தேவாதி தேவன்.*

*** நேசமிலாதவர்க்கும் நினையாதவர்க்குமரியான்.**
**வாசமலர்ப் பொழில்சூழ் வடமாமதுரைப் பிறந்தான்.**
**தேசமெல்லாம் வணங்கும திருமாலிருஞ்சோலை நின்ற**
**கேசவநம்பி தன்னைக் கெண்டையொண்கண்ணி காணுங்கொலோ?(6)**

*பக்தி இல்லாதவர்க்கும், நினையாதவர்க்கும் அடைய முடியாதவனும், சோலைகள் சூழ்ந்த வடமதுரையில் பிறந்தவனும், எல்லோரும் வணங்கத்தக்க திருமாலிருஞ்சோலையில் வந்து நிற்பவனும், அழகிய தலைமயிரையுடையவனுமான எம்பெருமானை, கெண்டை மீனைப்போன்ற கண்ணழகு பெற்ற என்மகள் காணப் பெறுவளோ?*

** பற்றுடை அடியவர்க்கு எளியவன் திருமாலிருஞ்சோலை எம்பெருமான்.*

**புள்ளினைவாய் பிளந்து பொருமாகரி கொம்பொசித்து.**
**கள்ளச்சகடுடைத்த கருமாணிக்க மாமலையை.**
**தெள்ளருவி கொழிக்கும் திருமாலிருஞ்சோலைநின்ற,**
**வள்ளலை வாணுதலாள் வணங்கித் தொழவல்லள்கொலோ? (7)**

*கண்ணபிரானாக அவதரித்துக், கொக்குவடிவத்தில் வந்த அசுரனின் வாயைக் கீண்டொழித்தவனும், குவலயாபீடம் என்ற யானையின் தந்தங்களை முறித்தழித்தவனும், சகடாசுரனைத் திருவடியால் உதைத்து அழித்தவனும், கருமாணிக்கமலை போன்றவனுமான எம்பெருமானே அருவிகள் கொழிக்கும் திருமாலிருஞ்சோலை*

*மலையில் நிலையாக வாழ்கிறான். மாபெரும் வள்ளலாகிய அந்த எம்பெருமானை என்மகள் வணங்கித்தொழும் பேறுபெறுவளோ?*

* *மலைமேல் ஒரு மாமலை! திருமாலிருஞ்சோலை மலைமேல் கரு மாணிக்க மாமலை!*

**பார்த்தனுக்கு அன்றருளிப் பாரதத்தொரு தேர்முன் நின்று**
**காத்தவன்றன்னை விண்ணோர் கருமாணிக்க மாமலையை.**
**தீர்த்தனைப் பூம்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலை நின்ற.**
**மூர்த்தியைக் கை தொழவும் முடியும் கொல்? என்மொய்குழற்கே.** (8)

*முன்பொருகாலத்தில் (கண்ணனாகப்பிறந்து வளர்ந்து உலகை ரக்ஷித்துவரும் காலத்தில்) பார்த்தஸாரதியாக இருந்துகொண்டு அர்ஜுனனைக் காத்தவனும், பரமபதத்தில் எப்போதும் நித்யஸூரிகளால் அநுபவிக்கப்படுகிறவனும், கரிய மாணிக்க மலை போன்றவனும், மிக்க தூயவனுமாகிய எம்பெருமானே, திருமாலிருஞ்சோலையில் எழுந்தருளி இருக்கிறான். அந்த அழகர் எம்பிரானை, அடர்ந்த கூந்தலையுடைய என்மகள் கைதொழப்பெறுவளோ?*

* *பார்த்தஸாரதியே சுந்தரத் தோளுடையான்.*

**வலம்புரி ஆழியனை வரையார் திரள் தோளன்றன்னை.**
**புலம்புரிநூலவனைப் பொழில்வேங்கட வேதியனை.**
**சிலம்பியலாறுடைய திருமாலிருஞ்சோலை நின்ற,**
**நலந்திகழ் நாரணனை நணுகுங்கொல்? என்நன்னுதலே.** (9)

*திருவாழியையும், திருச்சங்கினையும் கையில் கொண்டவனும் மலைபோன்ற திண்ணியதோளனும், அழகிய முப்புரிநூலணிந்தவனும். சோலைசூழ் திருவேங்கடத்தில் வாழ்பவனும், வேதங்களால் கூறப்படுகிறவனுமான பெருமான், சிலம்பாறு பாயும் திருமாலிருஞ்சோலையில் எழுந்தருளி இருக்கிறான். அழகிய கல்யாண குணங்களை விளக்கிக் கொண்டு எழுந்தருளி இருக்கும் இவ்வெம்பெருமானை அழகிய நெற்றியையுடைய என்மகள் அடையடபெறுவளோ?*

* *சிலம்பாறு பாயும் தென் திருமாலிருஞ்சோலையே அழகர் அமரும் மலை.*

*** தேடற்கரியவனைத் திருமாலிருஞ்சோலை நின்ற**
**ஆடற்பறவையனை அணியாயிழை காணுமென்று**
**மாடக்கொடிமதிள் சூழ் மங்கையார் கலிகன்றிசொன்ன**
**பாடற் பனுவல் பத்தும் பயில்வார்க்கில்லை பாவங்களே. (10)**

ஒருவராலும் தேடிப்பிடிக்க முடியாதவனும், திருமாலிருஞ் சோலையில் எழுந்தருளி இருப்பவனும், கருடனை ஊர்தியாகக் கொண்டவனுமான அழகியதோளுடையானை (சுந்தரபாஹுவை) அழகிய ஆபரணங்கள் அணிந்த என்மகள் காணப் பெறுவாள் என்று, கொடி மதிள் சூழ்ந்த திருமங்கை நன்னாட்டிலுள்ளவர் களுக்குத் தலைவரான ஆழ்வார் அருளிய இத்திருமொழியைக் கற்பவர் பாவங்கள் தொலையப் பெறுவர்.

* இப்பத்துப்பாடல்களைச் சொல்லுகிறவர்கள் திருமாலிருஞ் சோலை அழகரை ஸேவிக்கப் பெறுவார்கள்.

அடிவரவு : மூவரில் புனை உண்டு சிங்கம் தானவன் நேசம்
புள்ளினை பார்த்தனை வலம்புரி தேடற்கு எங்கள்.

## * ஒன்பதாம்பத்து—ஆறும்திருமொழி.

### அக்கும் புலியினதளும்.

கால்களால் நடந்து செல்ல வல்லமையற்ற என்னை திருக்குறுங்குடியில் கொண்டு போய் விடுங்கள் என்று முன் திருமொழியில் பரகால நாயகி தன் தோழியர்களிடம் வேண்டிக் கொண்டாள். ஈற்றுப் பாசுரத்தில், புருஷகாரம் செய்வதையே கடமையாகக் கொண்ட பெரிய பிராட்டியார் திருக்குறுங்குடியில் எழுந்தருளி இருப்பதை நினைத்தாள். அங்கிருக்கும் எம்பெருமானின் கல்யாண குணத்தையும் நினைத்தாள். தேவதாந்தரத்திற்கு (மற்ற தேவதைக்கு)த்தன் திருமேனியில் இடம் கொடுக்கும் சீலமுடையவனன்றோ அவன்! அவனையே தலைவனாகப் பெற்ற நமக்கு என்ன குறை?என்று நினைத்து எல்லா ஸ்ரீவைஷ்ணவர்களையும் கூட்டிக் கொண்டு திருக்குறுங்குடிக்குச் சென்று பகவானை அனுபவிக்கிறார் இத்திருமொழியில்.

***அக்கும் புலியினதளு முடையாரவரொருவர்**
**பக்கம் நிற்கநின்ற பண்பனூர் போலும்.**
**தக்க மரத்தின் தாழ்சினையேறி, தாய் வாயில்**
**கொக்கின் பிள்ளை வெள்ளிறவுண்ணும் குறுங்குடியே (1)**

கொக்கின் பிள்ளை [சிறு கொக்கு] தனக்கு ஏற்ற ஒரு மரத்தின் கிளையில் ஏறித் தாய்க் கொக்கின் வாயில் இருக்கின்ற 'வெள்ளிறு' என்னும் மீனை எடுத்துத் [தான்] உண்ணுகிற இடம் திருக்குறுங்குடி. மனித எலும்புகளையும் புலித்தோலையும் அணிகளாக அணிந்திருக்கும் சிவபிரானுக்கும் அருகில் இருக்க இடங்கொடுத்து எழுந்தருளி இருக்கும் சீலகுணமுடைய எம்பெருமானின் திவ்யதேசம் இது.

* கொக்கு என்ற சொல் ஒருவகைப் பறவையையும், மாமரத்தையும் உணர்த்தும்.

**துங்கா ரரவத்திரை வந்துலவ, தொடுகடலுள்**
**பொங்காரரவில் துயிலும் புனிதனூர்போலும்.**
**செங்காலன்னம் திகழ் தன்பணையில் பெடையோடும்**
**கொங்கார் கமலத்தலரில் சேரும் குறுங்குடியே. (2)**

சிவந்த கால்களையுடைய அன்னப்பறவை நீர்நிலைகளிலுள்ள தாமரைமலரில் பெடையோடு சேர்ந்து வாழுமிடம் திருக்குறுங்குடி

---

* சில திவ்யதேசங்களில் கோயில் திருமொழி ஸேவாகால க்ரமத்தில் இந்தத் திருமொழியும் சேர்த்து ஸேவிக்கப் படுகிறது.

இது அலையொலிமிக்க திருப்பாற்கடலில் திருவனந்தாழ்வான் மீது திருக்கண்வளரும் புனிதனின் திவ்யதேசம்.

* பிராட்டியோடு சேர்ந்து வாழும் [திருக்குறுங்குடி] எம்பெருமானே பெடையோடு வாழும் செங்கால் அன்னமாம்.

**வாழக்கண்டோம் வந்து காண்மின் தொண்டீர்காள்!**
**கேழல் செங்கண் மாமுகில் வண்ணர் மருவுமூர்!**
**ஏழைச் செங்கால் இன்துணை நாரைக் கிரைதேடி,**
**கூழைப் பார்வைக் கார்வயல் மேயும் குறுங்குடியே** (3)

தொண்டீர்! உய்யும் வகை [வழி] அறிந்தோம். மெத்தென்ற செங்கால்களையுடைய நாரைச் சேவலுக்கு உணவு தேடிக் கொண்டே நாரைப்பேடை கள்ளப்பார்வை பார்க்குமிடம் திருக்குறுங்குடி. இங்குத்தான் வராக அவதாரத்தை மேற் கொண்டவனும் கமலக் கண்ணனும் முகில் வண்ணனுமாகிய பெருமான் எழுந்தருளி இருக்கிறான். இங்குவந்து வணங்குங்கள்.

* வந்து காண்மின் குறுங்குடியை.

**சிரமுனைந்து மைந்தும் சிந்தச் சென்று. அரக்க**
**னுரமும்கரமும் துணித்த உரவோனூர் போலும்.**
**இரவும் பகலும் ஈன் தேன் முரல மன்றெல்லாம்**
**குரவின் பூவேதான் மணநாறும் குறுங்குடியே.** (4)

இலங்கைக்கு எழுந்தருளி இராவணனின் பத்துத் தலைகளையும் மார்பினையும் கைகளையும் அழித்த பெருமானே, ஆச்ரித விரோதிகளைத் தொலைப்பதற்காகக் கோயில் கொண்டிருக்கும் இடம் திருக்குறுங்குடி. இவ்வூரில் எப்போதும் வண்டுகள் ஒலித்துச் செவிக்கு இன்பம் அளிக்கின்றன. எல்லா இடங்களிலும் குரவமலர்களின் நறுமணம் வீசி மூக்குக்கு இன்பம் அளிக்கிறது.

* எம்பெருமானின் திருவுள்ளம் மலர்ந்து அருள் மணம் வீசும் இடமும், வண்டுகளாகிற அடியார்களின் மறையொலி கேட்கும் இடமுமாக இருப்பது திருக்குறுங்குடி.

**கவ்வைக்களிற்று மன்னர் மாளக் கலிமாந்தேர்**
**ஐவர்க்காய், அன்றமரிலுய்த்தானூர் போலும்.**
**மைவைத்திலங்கு கண்ணார்தங்கள் மொழியொப்பான்.**
**கொவ்வைக்கனிவாய் கிள்ளைபேசும் குறுங்குடியே.** (5)

கோவைப்பழம் போல் சிவந்த வாயையுடைய கிளிகள், அழகிய கண்களையுடைய பெண்களைப்போல் இனிமையாகப் பேசுமிடம் திருக்குறுங்குடி. முன்னொருகால் பாரதப்போரில் யானைப் படைகளைக் கொண்ட கௌரவப் பேரரசர்கள் மாண்டு போகும்படி பஞ்ச பாண்டவர்களுக்காகப் பார்த்தஸாரதியாக இருந்து கொண்டு பெரிய தேரினைச் செலுத்திய பெருமான் இவ்வூரில் தான் வாழ்கிறார்.

* பரகாலநாயகி இளங்கிளிபோல் இனிமையாகப் பேசுகிறவள்.

**தீநீர்வண்ண மாமலர் கொண்டு விரையேந்தி**
**தூநீர் பரவித் தொழுமின் எழுமின் தொண்டீர்காள்!**
**மாநீர் வண்ணம் மருவியுறையுமிடம், வானில்**
**கூனீர் மதியை மாடம் தீண்டும் குறுங்குடியே** (6)

தொண்டீர்காள்! நீங்கள் மாமலர், நீர், சுடர், தீபம் வாசனைப் பொருள்கள் ஆகியவற்றைக் கையில் ஏந்தி, குறுங்குடி எம்பெருமானைத் தொழுங்கள். சந்திரனையும் எட்டும் வானோங்கிய மாட மாளிகைகள் நிறைந்த இவ்வூர், கடல்வண்ணர் வாழுமிடமாம்.

* திருவாராதனமே திருமாலை உகப்பிக்கும்.

**வல்லிச்சிறு நுண்ணரியாரிடை நீர்வைக்கின்ற**
**அல்லல் சிந்தை தவிர அடைமின் அடியீர்காள்!**
**சொல்லில் திருவேயனையார் கனிவாய் எயிறொப்பான்**
**கொல்லை முல்லை மெல்லரும்பீனும் குறுங்குடியே,** (7)

அடியீர்காள்! நீங்கள் கொடிபோன்று மிக நுண்ணிய இடையுடைய பெண்களிடம் வைத்திருக்கும் சிந்தனையைத் தவிர்த்து மகாலக்ஷ்மி போன்ற பெண்களின் பற்கள் போல் முல்லைக் கொடிகள் எங்கும் அரும்புகளைக் காட்டும் திருக்குறுங்குடியை அடையுங்கள்.

* திருக்குறுங்குடி என்னும் இத்திவ்யதேசம் அல்லல் சிந்தையை அடியோடு அழிக்கும்.

**நாராரிண்டை நாண்மலர் கொண்டு நந்தமர்காள்!**
**ஆராவன்போடு எம்பெருமானூர் அடைமின்கள்.**
**தாராவாரும் வார்புனல் மேய்ந்து வயல் வாழும்**
**கூர்வாய் நாரை பேடையோடாடும் குறுங்குடியே.** (8)

பகவத் பக்தர்களே! நீர் நிலைகளில் இரைமேய்ந்து, வயல்களில் கூர் வாய் நாரைகள் பேடைகளோடு வாழும் திருக்குறுங்குடியைச் சென்றடையுங்கள். செல்லும்போது அங்குவாழும் எம்பெருமானுக்காக அழகிய பூமாலைகளையும், அப்போதலர்ந்த நல்ல மலர்களையும் கையில் எடுத்துச் சொல்லுங்கள்.

* இன்பவாழ்க்கை அளிக்கும் இடம் திருக்குறுங்குடி.

**நின்றவினையும் துயரும் கெட மாமலரேந்தி**
**சென்றுபணிமின் எழுமின் தொழுமின் தொண்டர்காள்!**
**என்றுமிரவும் பகலும் வரிவண்டிசை பாட**
**குன்றின்முல்லை மன்றிடைநாறும் குறுங்குடியே.** (9)

இரவும் பகலும் வண்டுகள் ஒலிக்கப் பெற்றதும், மலையிலுள்ள முல்லைப்பூக்கள் மணம் கமழப் பெற்றதுமான திருக்குறுங்குடியை அடைந்து எம்பெருமானை வணங்குங்கள். பலன் கொடுத்துக் கொண்டிருக்கும் பாவங்களும், பலன் கொடுக்கப் போகும் பாவங்களும் அழிந்து போவதற்காகக் கையில் மலர்களை எடுத்துச் சென்று அவனடிசேர்த்துக் கைகூப்பித் தொழுதிடுங்கள்.

* திருக்குறுங்குடி நம்பியைத் தொழுதால், போயபிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்.

*** சிலையாலிலங்கை செற்றான் மற்றோர் சினவேழம்**
**கொலையார் கொம்பு கொண்டான் மேய குறுங்குடிமேல்.**
**கலையார் பனுவல் வல்லான் கலியனொலிமாலை**
**நிலையார் பாடல் பாடப் பாவம் நில்லாவே.** (10)

தன்வில் வலி கொண்டு இலங்கையை அழித்தவனும், சினங் கொண்டு கொலைத் தொழில் புரியும் குவலயாபீடம் என்னும் யானையின் தந்தங்களை முறித்தவனுமாகிற எம்பெருமான் எழுந்தருளியுள்ள திருக்குறுங்குடியைப் பற்றித் திருமங்கையாழ்வார் அருளிய அழகிய கவிகளால் (பாடல்களால்) அமைந்த சொல் மாலையை இப்பதிகத்தைச் சொன்னால் பாவங்கள் (தீவினைகள்) அழிந்து போகும்.

அடிவரவு —அக்கு துங்கார் வாழ சிரமுன் கவ்வை தீநீர் வல்லி நாரார் நின்ற சிலையால் தந்தை.



தென்துவராபதி மன்னன் மன்னார்குடி ராஜகோபாலன் (கண்ணன்)

## பத்தாம்பத்து—எட்டாம் திருமொழி.
### காதிற் கடிப்பிட்டு.

[கண்ணபிரான் ஓர் இடைப்பெண்ணோடு(ஆய்ப்பெண்ணோடு) சேர்ந்து இருந்துப் பிரிந்து சென்றான். ஒரு நேரத்தைக் குறிப்பிட்டு அந்த நேரத்தில் மீண்டும் வருவதாகச் சொல்லிச் சென்றான். ஆனால் அந்த நேரத்தில் வேறோர் ஆய்ச்சியோடு இருந்து பொழுது போக்கி விட்டான். எனினும் காலம் கடந்து வந்து நின்றான். அவனை எதிர்பார்த்திருந்த ஆய்ச்சிக்குக் கோபம்; அன்பு மேலீட்டால் ஏற்பட்ட சினம். 'ஐயனே! எங்கு வந்தீர்! எதற்காக இங்கு வந்தீர்! உமக்கு ஏற்ற [மனைவியர்] ஆயர் பெண்கள் பலர் இருக்க அவர்களை விட்டு இங்கு என்ன வேலை? என்று கூறினாள். இவ்வாறு ஆய்ப்பெண் சொன்ன வார்த்தைகளைத் திருமங்கையாழ்வார் இப்பதிகத்தால் அனுபவிக்கிறார். இப்பதிகம் 'ஏர்மலர்ப் பூங்குழல்' என்ற பெருமாள் திருமொழியைப் போலவும், 'மின்னிடை மடவார்கள்' என்ற திருவாய்மொழியைப் போலவும் அமைந்துள்ளது. இதை ஊடற்பதிகம் என்று கூறலாம்.]

***காதிற் கடிப்பிட்டுக் கலிங்கமுடுத்து**
**தாதுநல்ல தண்ணந்துழாய் கொடணிந்து.**
**போதுமறித்துப் புறமே வந்துநின்றீர்!**
**ஏதுக்கிதுவென் இதுவென் இதுவென்னோ!** (1)

பெரியவரே! காதில் குண்டலத்தையும் திருவரையில் பட்டாடையையும் நறுமணம் மிக்க குளிர்ந்த திருத்துழாய் மாலையையும் அணிந்து கொண்டு, நேரம்கழித்து வந்து கதவின் புறத்தே ஏன் நிற்கிறீர்? இயற்கையாகவே நறுமணம் பொருந்திய தேவரீர் திருத்துழாய் மாலையை அணிந்துவந்தது எதற்கு? கொடும்பசியின் போது கிடைக்காத [அன்னம்] சோறு இப்போது எதற்கு? உம்மழகை நீரே கண்டு மகிழ்ந்திரும். எனக்கு எதற்கு? வேண்டா; வேண்டவே வேண்டா, என்று [ஆய்ப்பெண்] கதவை அடைக்கிறாள்.

* ஸ்ரீமந் நாராயணனுக்கே உரியது திருத்துழாய் மாலை.

**துவராடையுடுத்து ஒரு செண்டு சிலுப்பி**
**கவராக முடித்துக் கலிக்கச்சுக் கட்டி**
**சுவரார் கதவின்புறமே வந்துநின்றீர்**
**இவரார்? இதுவென்? இதுவென்? இதுவென்னோ?** (2)

சிவப்பான திருப்பரிவட்டத்தைச் சாத்திக் கொண்டு திருக்குழலை [தலைமயிரை] வாரிமுடித்து இடுப்பில் வலிய கச்சுப்பட்டையைக் கட்டிக் கொண்டு, கையில் ஒரு பூச்செண்டைச் சிலுப்பிக் கொண்டே சுவரோடு சேர்ந்த கதவின் புறமே வந்துநிற்கின்றார்! இவர் யார் கொல்? எதற்காக இப்படி வந்து நிற்கிறார்?

* கீழே கலிங்கம்! இதில் துவராடை! கணத்திற்கு ஒரு அலங்காரமோ? இது யாரை மயக்க?

**கருளக் கொடியொன்றுடையீர்! தனிப்பாகீர்!**
**உருளச் சகடமது உறக்கில் நிமிர்த்தீர்!**
**மருளக் கொடுபாடி வந்தில்லம் புகுந்தீர்**
**இருளத்திதுவென்? இதுவென்னிது வென்னோ?** (3)

நீர் மிகமிகப் பெரியீர்! கருடக்கொடியுடையீர்! அக்கருட வாஹனத்தைச் செலுத்துவதில் வல்லமையுடையீர்! உறங்கும் போது பாலுக்கு அழுவது போல் பாவனைசெய்து திருவடியை நிமிர்த்து சகடாசுரனை அழித்தீர்! இவ்வளவு பெருமைகளைப் பெற்ற நீர், இவ்விரவில் பெண்கள் எல்லோரும் மோஹிக்கும்படி இசை பாடிக் கொண்டே என்வீட்டிற்குள் வந்து சேர்ந்தீர்! எதற்காக வந்து புகுந்தீர்? போமின், போமின் என்கிறாள்.

*'வாஹனம் வேதாத்மா விஹகேச்வர: கருடன்மறை;' இவனே மறைப் பொருள்!

**நாமம் பலவுமுடை நாரண நம்பி!**
**தாமத் துளபம் மிக நாறிடு கின்றீர்!**
**காம னெனப்பாடி வந்துஇல்லம் புகுந்தீர்**
**ஏமத்திது வென்? இது வென்னிது வென்னோ?** (4)

பற்பல திருநாமங்களையுடைய நாரண நம்பி! திருத்துழாய் மாலையை அணித்திருப்பவரே! மன்மதன் போல் பாடிக்கொண்டு இரவில் என் வீட்டில் புகுந்தீர்! கட்டுங் காவலுமான இந்த இடத்திற்கு ஏன் வந்து சேர்ந்தீர்? இரவில் நீர் தேடிப்போக வேண்டிய இடம் வேறு இருக்க இங்கு ஏன் வந்தீர்?

* பலபலவே ஆபரணம்; பேரும் பலபலவே.

**சுற்றுங் குழல் தாழச் சுரிகையணைத்து**
**மற்றும் பல மாமணி பொன் கொடணிந்து**
**முற்றம்புகுந்து முறுவல் செய்து நின்றீர்!**
**எற்றுக்கிதுவென்? இதுவென்? இதுவென்னோ?** (5)

*சுரிகுழல் (சுருண்ட தலைமயிர்) சுற்றும் தாழ்ந்துலாவ, உடைவாள், இரத்தினம், பொன் ஆகியவற்றாலாகிய திருவாபரணங்களை சாத்திக் கொண்டு எங்கள் வீட்டு முற்றத்தில் வந்து புன்சிரிப்புச் சிரித்துக் கொண்டு எதற்காக நிற்கிறீர்?*

* *நின் முகம் மாயமந்திரம் தான் கொலோ!*

**ஆனாயரும் ஆநிரையும் அங்கொழிய.**
**கூனாயதோர் கொற்றவில் லொன்று கையேந்தி,**
**போனாரிருந்தாரையும் பார்த்துப் புகுதீர்**
**ஏனோர்கள் முன்னென்? இதுவென்? இதுவென்னோ?** (6)

*பெரியீர்! இடையர்களையும் பசுக்கூட்டங்களையும் விட்டிட்டு, வளைந்த வில் ஒன்றைக் கையில் பிடித்துக்கொண்டு போகிறவர்களையும் வருகிறவர்களையும் கள்ளவிழியிட்டுப் பார்த்துக் கொண்டே வருகிறீர்! விரோதிகளின் கண்முன்னே வீண்பழி விளைவிப்பதற்காக ஏன் வந்தீர்? உன்ளே புகாதே எழுந்தருளீர்!*

* *வணங்காதவர்களையும் வில்போல் வணங்க வைப்பவன் எம்பெருமான்.*

**மல்லே பொருத திரடோள் மணவாளீர்!**
**அல்லேயறிந்தோம் நும் மனத்தின் கருத்தை.**
**சொல்லா தொழியீர்! சொன்ன போதினால் வாரீர்.**
**எல்லே! இதுவென்? இது வென்னிது வென்னோ?** (7)

*போர் செய்து மல்லர்களை அழித்த திரண்ட தோள்களையுடைய மணவாளரே! உம்முடைய எண்ணத்தை நேற்றிரவே அறிந்து கொண்டோம். வரும் நேரத்தைச் சொல்லாமலே போகிறீரில்லை; சொல்லிவிட்டே போகிறீர்; குறிப்பிட்ட நேரத்தில் வருவதுமில்லை. பேச்சுக்கும் செயலுக்கும் தொடர்பே இல்லை. அந்தோ! இது ஏன்?*

* *கண்ணனின் திருவுள்ளக்கருத்து கோபியர்களுக்கும், கோபியரின் கருத்து கண்ணனுக்கும்தான் தெரியும்.*

**புக்காடரவும் பிடித்தாட்டும் புனிதீர்!**
**இக்காலங்கள் யாமுமக்கு ஏதொன்றுமல்லோம்.**
**தக்கார் பலர் தேவிமார் சாலவுடையீர்!**
**எக்கே இது வென்? இதுவென்னிது வென்னோ? (8)**

*புனிதமானவரே! உம்மை அணுகுவதற்கும் எனக்குத் தகுதி இல்லையே! நீர் ஐந்தலை நாகத்தோடு எதிர்த்துப் போர் செய்து அதனை வாட்டிய மிடுக்குடையர்; அப்படிப்பட்ட உமக்கு நாங்கள் ஒருபொருளாகவும் மதிக்கத்தக்கவர்கள் அல்லோம்! நீரோ உமக்குத் தகுந்தபல தேவியர்களை உடையராய் இருக்கின்றீர்! அப்படி இருக்க இங்கு வந்து நிற்பானென்? அந்தோ! இது என்ன கஷ்ட காலம்!*

** பதினாறுமாயிரவர் தேவிமார் பணி செய்ய, வீற்றிருக்கும் மணவாளர் கண்ணபிரான்.*

**ஆடியசைந்து ஆய் மடவாரொடு நீ போய்,**
**கூடிக்குரவைபிணை கோமளப் பிள்ளாய்!**
**தேடித்திருமாமகள் மண்மகள் நிற்ப**
**ஏடி! இதுவென் இதுவென்னிது வென்னோ? (9)**

*திருமகளும் மண்மகளும் தேடிக் கொண்டிருக்க, அவர்களைவிட்டு இடைப் பெண்களோடு கலந்து அசைந்தாடிக் குரவைக்கூத்து ஆடிய அழகிய பிள்ளாய்! இங்கு வந்து நிற்கிறீரே? இது என்ன காரியம்? தோழி! இது என்ன செயல்? (இவனை உள்ளே புகச் செய்தாயே! என்ன செயல் செய்தாய்!)*

** ஸ்ரீ, பூமி, நீளா, நாயகன் கண்ணன்.*

***அல்லிக் கமலக் கண்ணனை அங்கோ ராய்ச்சி**
**எல்லிப் பொழுதூடிய ஊடல் திறத்தை.**
**கல்லின் மலிதோள் கலியன் சொன்னமாலை**
**சொல்லித் துதிப்பாரவர் துக்கமிலரே. (10)**

*அழகிய தாமரை இதழ் போன்று நீண்டு அகன்ற கண்களையுடைய கண்ணனை நோக்கி, ஓர் இடைச்சி இரவு நேரத்தில் ஊடல் தோற்றப் பேசிய வெறுப்பு வார்த்தைகளை, மலையைக் காட்டிலும் வலிமைமிக்க தோள்களையுடைய திருமங்கையாழ்வார் (அருளிச் செய்த இச்சொல் மாலையை (இப்பதிகத்தை) வாயாரச் சொல்லி எம்பெருமானைத் துதிப்பவர்கள் துன்பமற்று வாழ்வார்கள்.*

** பங்கயக் கண்ணனை வாயாரப்பாடு.*

*அடிவரவு:—காதில் துவர் கருளக்கொடி நாமம் சுற்றும் ஆனையர் மல்லே புக்கு ஆடி அல்லி புள்ளுரு.*

## பதினோராம்பத்து—எட்டாம் திருமொழி.

மாற்றமுள.

பயிர் செய்பவன் கழனியில் குடிசை கட்டிக் கொண்டு பயிர்களுக்குக் கேடு வராதபடி பாதுகாப்பது வழக்கம். அதுபோல எம்பெருமான பூமியில் பல கோவில்களை ஏற்படுத்திக் கொண்டு அவற்றில் எழுந்தருளி இருந்து உலகைக் காப்பாற்றி வருகிறான். எம்பெருமான் உகந்து எழுந்தருளி இருந்து, ஆழ்வார்களிடமிருந்து மங்களாசாஸனத்தைப் பெற்றிருக்கிறான். இப்படிப்பட்ட இடங்களை திவ்யதேசம் என்கிறோம். திவ்யதேசங்களுக்குள் தலைமை பெற்றது திருவரங்கம்; இவ்வாழ்வாரின் (திருமங்கையாழ்வாரின்) அவதாரஸ்தலத்திற்கு மிக அருகில் இருப்பது திருவாலி. இவ்விரு (சோழநாட்டுத்) திருப்பதிகளையும் ஆழ்வார் இத்திருமொழியில் (இப்பதிகத்தில்) குறிப்பிடுகிறார்.

பிறவித்துன்பம் மிகக்கொடியது. அது என்னால் போக்கிக் கொள்ள இயலாதது. இதை நினைத்து மிகவும் அஞ்சுகிறேன். 'எம்பெருமானே! உன்னை அடைந்து அநுபவிப்பதற்குத் தடையாக இருக்கும் இந்தப்பிறவியை (தேஹஸம்பந்தத்தை)ப் போக்கியருள வேணும்' என்று கூறிக்கொண்டு எம்பெருமானின் திருவடிகளில் சரணம் புகுகிறார்.

மற்ற பதிகங்களுக்கும் இப்பதிகத்திற்கு (இத்திருமொழிக்கும்) சிறிது மாற்றம் உள. இது-சாற்றுத் திருமொழி. 'மாற்றமுள' என்ற இப்பதிகத்தையே சாற்றுமறை காலத்தில் ஸேவிக்கிறார்கள். சில இடங்களில் இத்திருமொழியின் 9, 10 பாசுரங்களை மட்டும் ஸேவிப்பது உண்டு. இது மிக மிக அற்புதமான பதிகம். இதில் அழகிய உவமைகள் பல ஆழ்வாரின் திருவாக்கிலிருந்து வெளி வந்து நம்மை மகிழ்விக்கின்றன.

***மாற்றமுள ஆகிலும் சொல்லுவன். மக்கள்**
**தோற்றக்குழி தோற்றுவிப்பாய் கொல்? என்றின்னம்.**
**ஆற்றங்கரை வாழ்மரம் போல் அஞ்சுகின்றேன்.**
**நாற்றச்சுவை ஊறொலியாகிய நம்பீ!** (1)

வாசனை, சுவை, ஸ்பர்சம் (உடலால் ஏற்படும் உணர்ச்சி) ஒலி என்னும் புலன்களுக்கு உரிய பெருமானே! 'நீ அடியேனை ஆட்கொள்ளவில்லை' என்று நான் உன்மேல் குறை கூறினால், 'நீ தான் என்னிடம் ஆட்பட்டு உய்ந்திடவில்லை' என்று நீ என்னைக் குறை கூற இடமுண்டு. ஆகிலும் நான் ஒன்று சொல்வேன். உன்னைச் சரணடைந்த மனிதர்களை 'மீண்டும் மீண்டும் பிறக்கச்

செய்வது போல என்னையும் செய்து விடுவாயோ? என்று எண்ணி ஆற்றின் கரையில் இருக்கும் மரம் போல் அஞ்சுகிறேன்.

* எம்பெருமானைச் சரணடைந்தவர்க்கு மீண்டும் பிறப்பில்லை.

**சீற்றமுள வாகிலும் செப்புவன். மக்கள்**
**தோற்றக்குழி தோற்றுவிப்பாய் கொல் என்றஞ்சி.**
**காற்றத்திடைப்பட்ட கலவர் மனம்போல்.**
**ஆற்றத்துளங்கா நிற்பன் ஆழிவலவா!** (2)

சக்கரத்தை வலக் கையில் கொண்ட பரமனே! நீ கோபித்துக் கொள்ளும்படியான குற்றம் என்னிடம் உள்ளது. உன்னைத் தவிர எனக்கு வேறு கதி இல்லை. ஆதலால், என் குறையை உன்னிடம் கூறுகிறேன். வினைப்பயனாகப் பிறக்கும் மனிதப் பிறவியில் மீண்டும் என்னைப் பிறக்கச் செய்வாயோ? என்று எண்ணிப் பெருங்காற்றில் அகப்பட்ட மரக்கலத்தில் உள்ளவர் மனம்போல நடுங்கி நிற்பேன்,

* அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில்.

**தூங்கார் பிறவிக்கள் இன்னம் புகப்பெய்து.**
**வாங்காய் என்று சிந்தித்து நானதற்கஞ்சி.**
**பாம்போடொரு கூரையிலே பயின்றாற்போல்**
**தாங்காதுள்ளம் தள்ளும் என்தாமரைக்கண்ணா!** (3)

செந்தாமரைக் கண்ணா! சஞ்சலம் மிக்க பிறப்புகளில், இதுவரை நான் பட்டது போதாதோ! 'மீண்டும் என்னை இப்பிறவியிலே புகும்படியாகச் செய்து என்னை மீட்காமல் இருந்து விடுவாயோ? என்று கவலைகொண்டு, அதற்கு அஞ்சிப் பாம்போடு ஒரு வீட்டில் பழகி வசிப்பது போல், பல பொல்லாங்குகளுக்கு இடமான உடலோடு கூடி வாழ்வதைப் பொறுமல் என்மனம் தடுமாறுகிறது.

* பகவான் தாமரைக் கண்களால் கடாக்ஷித்தால் மீண்டும் பிறவி ஏற்படாது.

**உருவார் பிறவிக்கள் இன்னம் புகப்பெய்து.**
**திரிவாய் என்று சிந்தித்தியென்றதற்கஞ்சி.**
**இருபாடெரி கொள்ளியினுள் எறும்பேபோல்**
**உருகாநிற்கும் என்னுள்ளம் ஊழிமுதல்வா!** (4)

ஊழிக்காலத்தில் உலகம் முழுவதையும் வயிற்றில் வைத்துப் பாது காக்கும் தலைவனே! (தேஹத்தையே ஆத்மா என்று எண்ணிப் பொழுதுபோக்கும் எங்கள் பிறவியைக் காட்டிலும் வேறுபட்டு) ஞானமும் குணங்களும் நிறைந்து கிருபையின் காரணமாகப் பிறத்தலையுடையவனே! என்னை மீண்டும் பிறவிகளை ஏற்கும்படி செய்து, காதம் பலவும் திரிந்து, நெருப்புப்பற்றி எரியும் கொள்ளிக் கட்டைகளின் நடுவே அகப்பட்டு வருந்தும் எறும்பு போல என் மனம் நெகிழ்ந்து உருகிக் கொண்டே இருக்கும்.

* ஞானிகள் துன்பம் நிறைந்த இப்பிறவியை விரும்ப மாட்டார்கள்.

**கொள்ளக் குறையாத இடும்பைக் குழியில்**
**தள்ளிப்புகப் பெய்திகொல் என்றதற்கஞ்சி.**
**வெள்ளத்திடைப்பட்ட நரியினம் போலே**
**உள்ளம் துளங்காநிற்பன் ஊழிமுதல்வா! (5)**

ஊழிமுதல்வா! மேன்மேலும் வளர்ந்துகொண்டே வரும் துன்பத்தைத் தரும் கர்ப்பத்தில் நீ என்னைத் தள்ளி விடுவாயோ, என்றஞ்சி வெள்ளத்தில் அகப்பட்ட நரிக்கூட்டம் போல் மனம் நடுங்குகின்றேன்.

* தந்திரத்தில் புகழ் பெற்ற நரியும் வெள்ளத்தில் அகப் பட்டுக் கொண்டால் செய்வது அறியாமல் திகைத்து நிற்கும்.

***படைநின்ற பைந்தாமரையோடு, அணிநீலம்**
**மடைநின்றலரும் வயலாலி மணாளா!**
**இடையனெறிந்த மரமே யொத்திராமே**
**அடைய வருளாய் எனக்குன்றனருளே. (6)**

நிலத்தை உழும்போது, கலப்பையில் அகப்பட்டு அழியாமல் ஒதுங்கி நின்ற தாமரை, நீலோத்பலக்கொடிகள், நீர் பாயும் மடையிலே கிடந்து மலர்ந்திருக்கின்றன. இத்தகைய வயல்கள் சூழ்ந்த திருவாலிநகரிலுள்ள மணவாளா! இடையர்கள் ஆடு மாடு களின் தழைக்காக மரங்களின் கிளைகளைப் பாதியளவு வெட்டிச் சாய்த்திருப்பார், அவை ஒரு பக்கம் பசுமையாகவும் ஒரு பக்கம் உலர்ந்தும் இருக்கும். அதுபோல, ஞானம் பெற்ற மகிழ்ச்சி யையும் நற்பேறு பெறாத வாட்டத்தையும் நான் அடைந்திடாத படி. எளியவனான அடியேனிடம் (உன்னை வந்து அடையும்படி) உன் கருணையைச் செலுத்த வேண்டும்.

*நமக்கு ஒரு நல்வழி காட்டி, நம் அறிவைத் தெளிவாக்கு வதும் எம்பெருமானின் திருவருள்தான்.

***வேம்பின் புழு வேம்பன்றியுண்ணுது. அடியேன்**
**நான் பின்னும் உன்சேவடியன்றி நயவேன்.**
**தேம்பலிளந்திங்கள் சிறைவிடுத்து, ஐவாய்ப்.**
**பாம்பினணைப்பள்ளி கொண்டாய் பரஞ்சோதி!** (7)

தக்ஷ முனிவரின் சாபத்தினுல் உடல் தேய்ந்து மெலிந்து வருந்தும் (பருவம் நிரம்பாத) சந்திரனை அத்துன்பத்திலிருந்து விடுவித்து திருவனந்தாழ்வான் மீது துயில் கொள்ளும் ஒளிமிகு எம்பெரு மானே! வேப்பமரத்தில் தோன்றிய புழு, அம்மரத்தின் இலை முதலி யவற்றைச் சுவைபட உண்ணுமேயன்றி வேறொன்றை உண்ணுது. அதுபோல உனக்கு 'அடிமைப்பட்ட நான், நீ வெறுத்தாலும் உன் சேவடிகளை (பொற்றுமரை அடிகளைத்) தவிர வேறொன்றை விரும்பேன்.

* துண்டவெண் பிறையின் துயர்தீர்த்தவன் அரங்கநகர்மேய அப்பன் (திருவரங்கன்).

***அணியார் பொழில்சூழ் அரங்க நகரப்பா!**
**துணியேனினி நின்னருளல்ல தெனக்கு!**
**மணியே! மணிமாணிக்கமே! மதுசூதா!**
**பணியாய் எனக்குய்யும்வகை பரஞ்சோதி!** (8)

அழகுமிக்க அணியரங்கத்தில் எழுந்தருளி இருக்கும் தந்தையே! இனி உன் கருணையைத் தவிர வேறொன்றைத் துஞ்சமாக நினைக்க மாட்டேன். நீலமணி போன்றவனே! மாணிக்கமே! மதுவென்னும் அரக்கனை அழித்தவனே! ஒளிமிக்கவனே! நான் பிறவித்துயர் தீர்ந்து உய்யும்படி அடியேனுக்கு ஒரு வார்த்தை அருளிச் செய்ய வேணும்.

*மா ஶுச: (வருந்தாதே) என்று ஒருவார்த்தை திருவாய் மலர்ந்து அருளினுல் போதுமே!

***நந்தா நரகத்தழுந்தாவகை, நாளும்**
**எந்தாய்! தொண்டரானவர்க் கின்னருள் செய்வாய்!**
**சந்தோகா! தலைவனே! தாமரைக்கண்ணு!**
**அந்தோ அடியேற்கருளாய் உன்னருளே!** (9)

அழியாத நரகமாகிற பிறவித்துயரில் மூழ்கிக் கிடக்க வேண்டாத படி அடியார்களுக்கு இன்னருள் செய்பவனே! எந்தையே! வேதங்களை எல்லாம் அறிந்தவனே! எல்லோருக்கும் மேம்பட்டவனே! தாமரைக் கண்ணு! அந்தோ! அடியேனுக்கு உன் அருளை அருளாய்!

* ஞானிகள் பிறவியை 'நரகம்' என்று கூறுவர்.

***குன்றமெடுத்து ஆநிரை காத்தவன் தன்னை**
**மன்றில் புகழ் மங்கைமன் கலிகன்றிசொல்**
**ஒன்றுநின்ற ஒன்பதும் வல்லவர் தம்மேல்**
**என்றும் வினையாயின சாரகில்லாவே.** (10)

புகழ்மிக்க திருமங்கை நன்னாட்டுத் தலைவரான ஆழ்வார் (கலியன்), கோவர்த்தனமலையைக் குடையாகப் பிடித்துப் பசுக்கூட்டங்களைப் பெருமழையிலிருந்து காத்த எம்பெருமான்மீது அருளிய இப் பத்துப் பாசுரங்களையும் சொல்லுகிறவர்கள் எப்படிப்பட்ட வினையும் நீங்கப் பெற்று இன்புறுவார்கள்.

* எம்பெருமான் பசுக்களை ரக்ஷித்தது போல், தன்னையே நம்புகிறவர்களை ரக்ஷித்தே தீருவான்.

அடிவரவு:- மாற்றம், சீற்றம், தூங்கார், உருவார், கொள்ள படை, வேம்பின், அணியார், நந்தா குன்றம் நிதி.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

## இரண்டாம் பத்து—மூன்றும் திருமொழி.

* விற்பெருவிழவும்.

பகவான் திருவெவ்வுளூரில் கிடந்த திருக்கோலத்தில் திருமங்கையாழ்வாருக்கு ஸேவைஸாதித்தான். அன்பர்கள், சண்பக மல்லிகையோடு செங்கழுநீர் இருவாட்சி எண்பகர் பூவும்கொணர்ந்து இவனுடைய திருவடிகளில்சேர்த்து அடிமைசெய்யலாம்படி சயனித்துக்கொண்டிருக்கும் எளிமைதான் என்னே! என்று அந்த அழகில் மூழ்கினர். இந்த எம்பெருமானை நின்ற திருக்கோலத்தில் ஸேவிக்க ஆசைப்பட்டார். எம்பெருமான் ஆழ்வாரைத் திருவல்லிக்கேணிக்கு வருமாறு அழைத்தார். எல்லோரையும் அழைத்து வாழ்விக்கும் பெருமானாகநின்றுகொண்டு ஸ்ரீ பார்த்தஸாரதி (பகவத்கீதையின் வடிவமாக) ஸேவை ஸாதிக்கிறுர் ஆழ்வார் பெருமானைஸேவித்து ஒரு முறைக்குப் பலமுறை 'திருவல்லிக்கேணிக் கண்டேனே' என்று கூறி,தான் அடைந்த ஆனந்தத்தை வெளியீடுகிறுர்.

[தொண்டைமான சக்கரவர்த்தியின் பிரார்த்தனையின்படி திருவேங்கடமுடையானே கண்ணனுக (குடும்பத்தோடு) ஸேவை ஸாதித்த இடம் என்று இத்தலத்தைப் பற்றிக் கூறுவார்கள். இவ்வூரிலுள்ள குளத்திற்கு அல்லிக்கேணி என்று பெயர். அல்லி மலர்கள் நிறைந்த குளமாக இருந்தது. இக்காரணம் பற்றியே ஸம்ஸ்கிருத மொழியில் கைரவிணீ என்று இதற்குப் பெயர் ஏற்பட்டது. குளத்தின் பெயரே இந்தத் திவ்யதேசத்திற்கும் பெயராக அமைந்தது. அருகிலுள்ள மயிலை (மயிலாப்பூர்) என்னும் இடமும் சேர்ந்து திருவல்லிக்கேணி ஒரேபகுதியாய் இருந்தபடியால் 'மாடமாமயிலைத் திருவல்லிக்கேணி' என்று ஆழ்வாரால் அருளிச் செய்யப்பட்டது.]

* விற்பெரு விழவும் கஞ்சனும் மல்லும்
வேழமும் பாகனும் வீழ
செற்றவன் தன்னைப் புரமெரி செய்த
சிவனுறு துயர்களை தேவை.
பற்றலர் வீயக் கோல்கையில் கொண்டு
பார்த்தன் தன் தேர்முன் நின்றானை,
சிற்றவைபணியால் முடிதுறந்தானைத்
திருவல்லிக்கேணிக் கண்டேனே, (1)

---

திருவல்லிக்கேணியில் கோயில் திருமொழி ஸேவா காலக்ரமத்தில் இந்தப் பதிகம் சேர்த்து ஸேவிக்கப்படுகிறது.

மிகப்பெரிய வில்விழா, இதை நடத்திய கம்ஸன், கம்ஸனால் ஏவப்பட்ட சாணூரன், முஷ்டிகன் என்னும் மல்லர்கள், குவலயா பீடம் என்கிற மதங்கொண்ட யானை, யானையை ஏவிய யானைப் பாகன் ஆகிய எல்லாவற்றையும் அழித்தவனும், திரிபுரம் எரித்த சிவபெருமானின் பிரம்மஹத்தி சாபத்தை நீக்கியவனும் சத்துருக்கள் மாண்டு போகும்படி சாட்டையைக் கையில் வைத்துக் கொண்டு அருச்சுனனின் தேரோட்டியாக நின்றவனும், சிறிய தாயாகிய கைகேயியின் சொற்கேட்டு முடிதுறந்தவனுமான பெருமானைத் திருவல்லிக்கேணியில் ஸேவிக்கப் பெற்றேன்.

* சாதுசனத்தை நலியும்கஞ்சனைச் சாதிப்பதற்காகக் கண்ணனாகப் பிறந்துப் பார்த்தஸாரதியாக விளங்கும் இவனே வேதமுதல்வன்.

*** வேதத்தை வேதத்தின் சுவைப்பயனை**
**விழுமிய முனிவர் விழுங்கும்,**
**கோதிலின் கனியை நந்தனார்களிற்றைக்**
**குவலயத்தோர் தொழுதேத்தும்.**
**ஆதியை யமுதை என்னையாளுடை**
**யப்பனை, ஒப்பவரில்லா**
**மாதர்கள் வாழும் மாடமா மயிலைத்**
**திருவல்லிக்கேணிக் கண்டேனே. (2)**

வேதஸ்வரூபியானவனும், அவரவர்களின் விருப்பத்திற்கு ஏற்றபடி வேதத்தில் சொல்லப்பட்ட கரும பலன்களைக் கொடுப்பவனும் சிறந்த முனிவர்களால் அநுபவிக்கப்படுகின்ற இன்சுவைமிக்க பழம் போன்றவனும் நந்தகோபரின் (ஆனைக்கன்று போன்ற) புத்திரனாக விளங்கியவனும், பூமியிலுள்ளார் அனைவரும் வணங்கித்தொழும் ஆதிபுருஷனும் அமுதம் போன்று போக்யமான வனும், [என்னை அடிமை கொண்டவனுமான எம்பெருமானை ஒப்பற்ற மாதர்கள் வாழும் மாடமாமயிலைத் திருவல்லிக்கேணியில் ஸேவிக்கப் பெற்றேன்.

* நந்தகோபர் திருமாளிகையில் ஓடித்திரிந்து மகிழ்விக்கும் யானைக்கன்று கண்ணபிரான்.

**வஞ்சனை செய்யத் தாயுருவாகி**
**வந்த பேயலறி மண்சேர,**
**நஞ்சமர் முலையூடுயிர் செகவுண்ட**
**நாதனைத் தானவர் கூற்றை,**
**விஞ்சை வானவர் சாரணர் சித்தர்**
**வியந்துதி செய்யப் பெண்ணுருவாகி**
**அஞ்சுவை யமுத மன்றளித்தானைத்**
**திருவல்லிக்கேணிக் கண்டேனே** (3)

*தாய்வடிவில் வஞ்சனையாக வந்த பூதனை என்கிற அரக்கி கீழே விழுந்து உயிர்விடும்படியாக அவளிடம் விஷப்பாலுண்டவனும், அஸுரர்களுக்கு யமன்போன்றவனும், ஸித்தர், சாரணர் வித்யாதரர்கள் வியந்து ஸ்தோத்திரம் செய்யும்படி முன்னொரு காலத்தில் உலகத்தையே மோஹிக்கச் செய்யும் அழகிய பெண்ணுருவம் பூண்டு தேவர்களுக்கு அமுதமளித்தவனும், எனக்குத் தலைவனுமாகிய எம்பெருமானைத் திருவல்லிக்கேணியில் கண்டேன்,*

* *அமுதமளித்த இன்னமுதன் ஸ்ரீ பார்த்தஸாரதி.*

**இந்திரனுக் கென்றுயர்களெடுத்த**
**எழில் விழவில் பழநடைசெய்,**
**மந்திர விதியில் பூசனை பெறாது**
**மழை பொழிந்திடத் தளர்ந்து, ஆயர்**
**எந்தம்மோடின வாநிரை தளராமல்**
**எம்பெருமானருளென்ன,**
**அந்தமில் வரையால் மழை தடுத்தானைத்**
**திருவல்லிக்கேணிக் கண்டேனே.** (4)

*இடையர்களால் நடத்தப்பட்ட இந்திரபூஜையில் தனக்குக் கிடைக்கவேண்டிய ஆராதனைப் பொருள் கிடைக்கப் பெறாததால் கோபங் கொண்ட இந்திரன் பெருமழையைப் பொழிவிக்க, அதனால் இடையர்கள் துன்பம் அடைந்து எங்கள் தலைவனே (கண்ணபிரானே! நாங்களும் பசுக்கூட்டங்களும் நோவுபடாதபடி எங்களைக் காப்பாற்றி அருளவேண்டும் என்று பிரார்த்திக்க) கோவர்த்தன மலையைக் கொண்டு மழையைத் தடுத்த பெருமானைத் திருவல்லிக்கேணியில் கண்டேன்.*

*நன்பமையை நடுந்து அன்பமையை மொழிபவன் ஸ்ரீபார்த்த ஸாரதி.

**இன்துணைப் பதுமத் தலர்மகள் தனக்கு**
**மின்பன் நற்புவிதனக்கிறைவன்**
**தன்துணையாயர் பாவை நப்பின்னை**
**தனக்கிறை மற்றையோர்க் கெல்லாம்**
**வன்துணை, பஞ்ச பாண்டவர்க்காகி**
**வாயுரை தூது சென்றியங்கும்**
**என்துணை, எந்தை தந்தை தம்மானைத்**
**திருவல்லிக்கேணிக் கண்டேனே.** (5)

*தனக்கு இனிய துணைவியான மலர்மகளாகிய பெரிய பிராட்டியாருக்கு இன்பனும் ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு நாதனும், ஆயர் மகளான நப்பின்னைப் பிராட்டிக்கு நாயகனும், மற்றுமுள்ள எல்லோருக்கும் பெருந்துணையாக இருப்பவனும், பாண்டவ தூதனைச் சென்று தூதுரைத்தவனும் எனக்குத் துணையானவனும், என் குலநாதனுமாகிய பெருமானைத் திருவல்லிக்கேணியில் கண்டேன்.*

*பரத்வமும் ஸௌலப்யமும் விளங்கும்படி ஸேவை ஸாதிப்பவன் ஸ்ரீபார்த்தஸாரதி.

**அந்தகன் சிறுவன் அரசர் தமரசற்கிளையவன்**
**அணியிழையைச் சென்று,**
**எந்தமக்குரிமை செய்யெனத் தரியாது**
**எம்பெருமானருளென்ன,**
**சந்தமல் குழலாளலக்கண் நூற்றுவர்தம்**
**பெண்டிரு மெய்தி நூலிழப்ப,**
**இந்திரன் சிறுவன் தேர்முன் நின்றானைத்**
**திருவல்லிக்கேணிக் கண்டேனே.** (6)

*பிறவிக்குருடனாகிய திருதராஷ்டிரனின் பிள்ளையாய், ராஜாதி ராஜனாய்த் தன்னை மதித்திருந்த துரியோதனனுடைய தம்பியான துச்சாஸனன், அழகிய ஆபரணங்களையுடைய திரௌபதியிடம்*

வந்து, 'நீ எங்களுக்கு அடிமை செய்யவேண்டும்' என்று சொல்ல, அதைப் பொறுக்கமாட்டாமல் 'எம் கண்ணபிரானே! அருள வேண்டும்' என்று பிரார்த்திக்க, அழகிய கூந்தலையுடைய திரௌபதியின் மன வருத்தத்தை துரியோதனன் முதலிய நூறு பேர்களுடைய மனைவிகளும் அடைந்து 'மாங்கல்யம்' இழக்கும்படி இந்திரனின் மகனான அருச்சுனனுடைய தேரின் முன்பு (ஸாரதியாய்) தேரோட்டியாய் நின்ற பெருமானைத் திருவல்லிக்கேணியில் கண்டேன்.

*இந்திரன் சிறுவன் அருச்சுனன்; இந்திரனின் மகன்.

***பரதனும் தம்பி சத்துருக்கனனும்**
**இலக்குமனோடு மைதிலியும்,**
**இரவுநன் பகலும் துதிசெய்ய நின்ற**
**இராவணாந்தகனையெம்மானை,**
**குரவமே கமழும் குளிர் பொழிலூடு**
**குயிலொடு மயில்கள் நின்றால,**
**இரவியின் கதிர்மகள் நுழைதல் செய்தறியாத்**
**திருவல்லிக்கேணிக் கண்டேனே.** (7)

பரதனும் அவனது தம்பியான சத்துருக்கனனும், இலக்குமனும் (லக்ஷ்மணனும்) ஸீதாபிராட்டியும், இடைவிடாமல் துதிக்கும்படி எழுந்தருளி இருக்கும், இராவண ஸம்ஹாரியான இராமனை, சூரிய கிரணங்கள் உள்ளே நுழையமுடியாதபடி நிழலைக் கொண்டதாயும் குயில்களும், மயில்களும் ஆரவாரிக்கும் இடமாகவும், குரவ மலர்ச்சோலைகள் நிறைந்த திருவல்லிக்கேணியில் கண்டேன்.

*குயில்களும் மயில்களும் கொண்ட குரவமலர்ச் சோலைகள் நிறைந்த இடம் திருவல்லிக்கேணி.

***பள்ளியிலோதிவந்த தன் சிறுவன்**
**வாயிலோ ராயிரநாமம்,**
**ஒள்ளியவாகிப்போத வாங்கதனுக்கு**
**ஒன்றுமோர் பொறுப்பிலனாகி,**
**பிள்ளையைச் சீறிவெகுண்டு தூண்புடைப்பப்**
**பிறையெயிற்றனல் விழிப்பேழ்வாய்,**
**தெள்ளிய சிங்கமாகிய தேவைத்**
**திருவல்லிக்கேணிக் கண்டேனே.** (8)

பள்ளிக்கூடத்தில் வாசித்துவந்த தன் மகனான பிரஹலாதனின் வாயில், விலக்ஷணமான ஸஹஸ்ரநாமங்கள் அழகாக உச்சரிக்கப் பட, அவற்றைக் கேட்டுச் சிறிதும் பொறுக்கமாட்டாத இரணியன், பிள்ளையின்மீது கோபம் கொண்டு, (உன்னால் சொல்லப்படுகிற நாராயணன் இதில் இருக்கிறானா? என்று கூறிக் கொண்டே) எதிரில் இருக்கும் தூணினை ஓங்கித்தட்ட, பிறை போன்ற பற்களையும், கனல் பறக்கும் விழிகளையும், பெரிய வாயை யும் கொண்ட நரசிம்மப்பெருமானாக அவதரித்து (இரணியனை ஸம்ஹரித்த பிறகு சாந்தமடைந்துத் தெளிந்த) தெளிசிங்கப் பெருமானைத் திருவல்லிக்கேணியில் ஸேவிக்கப்பெற்றேன்.

*அழகியான் தானே அரியுருவம் தானே!

***மீனமர் பொய்கை நாண்மலர் கொய்வான்**
**வேட்கையினோடு சென்றிழிந்த,**
**கானமர் வேழம் கையெடுத்தலறக்**
**கராவதன் காலினைக் கதுவ,**
**ஆனையின் துயரம் தீரப்புள்ளூர்ந்து**
**சென்று நின்றாழி தொட்டானை,**
**தேனமர்சோலை மாடமாமயிலைத்**
**திருவல்லிக்கேணிக் கண்டேனே.** (9)

மீன்கள் நிறைந்த ஒரு பொய்கையில், புதிதாக மலர்ந்த (தாமரை) மலர்களைக் கண்டு, அவற்றைக் கொய்து விடவேண்டும் என்கிற பேரார்வத்தோடு சென்று இறங்கிய காட்டு யானையாகிற கஜேந்திரனின் காலினை ஒரு முதலை கவ்விக்கொள்ள, அதன் பிடியிலிருந்து விடுவித்துக் கொள்ள இயலாத கஜேந்திரன், தனது துதிக்கையை உயரே தூக்கிக்கொண்டு கூச்சலிட, அதன் மன வருத்தம் தீரும்படிக் கருடன்மீது அமர்ந்து, வேகமாகப் பொய்கைக் கரைக்குச் சென்று, யானையின் எதிரில் நின்று, திருவாழியை (சக்ராயுதத்தை) முதலையின் மீது செலுத்தி (முதலை யைக் கொன்று யானையைக் காப்பாற்றிய) பெருமானைத் திருவல்லிக்கேணியில் கண்டேன்.

*ஸ்ரீதேவப்பெருமாள் (மூலவர்) கருடாரூடனாக இருந்து கொண்டு ப்ரயோக சக்கரத்தோடு கஜேந்திரவரதனாய் ஸேவை ஸாதிக்கும் இடம் திருவல்லிக்கேணி.

***மன்னுதண் பொழிலும் வாவியும் மதிளும்**
**மாடமாளிகையுப் மண்டபமும்,**
**தென்னன் தொண்டையார் கோன்செய்த நன்மயிலைத்**
**திருவல்லிக்கேணி நின்றானை,**
**கன்னி நன்மாட மங்கையர் தலைவன்**
**காமருசீர்க் கலிகன்றி,**
**சொன்னசொல்மாலை பத்துடன் வல்லார்**
**சுகமினிதாள்வர் வானுலகே. (10)**

குளிர்ந்த சோலைகளும், நீர் நிலங்களும், மதில்களும் மாடமாளிகைகளும், மண்டபங்களும் இருக்கும்படி பாண்டியர் குலத்தவனை தொண்டை மன்னன் ஏற்படுத்திய அழகிய மயிலையை அடுத்த திருவல்லிக்கேணியில் நின்றருளிய பெருமானைப்பற்றி, மாட மாளிகைகள் சூழ்ந்த திருமங்கை நன்னாட்டுத் தலைவரும், ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீயோடு விளங்குபவருமான திருமங்கையாழ்வார் அருளிய சொல்மாலையாகிற இப்பத்துப் பாசுரங்களையும் ஓத வல்லவர்கள் ஆனந்தமயமான பரமபதத்தை ஆளப் பெறுவார்கள்.

* ஸ்ரீபார்த்தஸாரதியிடம் மநோவாக்காயங்களாகிற திரிகரணங்களையும் செலுத்துவோர் பேரின்பத்துடன் சுகமாக வாழ்வார்கள்.

அடிவரவு :-வில் வேதத்தை வஞ்சனை இந்திரனுக்கு இன்துணை
அந்தகன் பரதன் பள்ளியில் மீனமர் மன்னு அன்றாயர்.



குறையல் பிரானடிக்கீழ் விள்ளாத அன்பன்
இராமாநுசன் ஸ்ரீ பெரும்புதூர்.

**திருமங்கையாழ்வார் அருளிய**

# பெரிய திருமொழி

(முழுதும்)

**முன்னடி—பின்னடி**

## பெரிய திருமொழி

**முதற்பத்து**

1 *வாடினேன் வாடி வருந்தினேன்-ஓடினேன் ஓடி உய்வதோர்
2 *ஆவியே அமுதே - தூவிசேரன்னம்
3 சேமமேவேண்டி - காமனூர் தாதை
4 வென்றியே வேண்டி - பன்றியாயன்று
5 கள்வனேனானேன் - உள்ளெலாமுருகி
6 *எம்பிரானெந்தை - வம்புலாம் சோலை
7 இற்பிறப்பறியீர் - சொற்பொருளாளீர்
8 கற்றிலேன் கலைகள் - செற்றமே வேண்டித்
9 *குலந்தரும் செல்வம் - வலம்தரும் மற்றும்
10 *மஞ்சுலாஞ்சோலை - துஞ்சும் போதழைமின்

1 *வாலிமாவலத்தொரு - ஆலிமாமுகிலதிர்
2 கலங்கமாக்கடலரி - விலங்கல் போல்வன
3 துடிகொள் நுண்ணிடை - கடிகொள்வேங்கை
4 மறங்கொளாளரி - இறங்கியேனங்கள்
5 கரைசெய்மாக்கடல் - வரைசெய்மாக்களிறு
6 பணங்களாயிரமுடைய - மணங்கொள் மாதவி
7 கார்கொள்வேங்கைகள் - ஏர்கொள்பூஞ்சுனை
8 இரவுகூர்ந்திருள் - பரமனூதியெம்பனி
9 ஓதியாயிரநாமங்கள் - தாதுமல்கியபிண்டி
10 *கரியமாமுகில் - வரிகொள்வண்டறை

1 *முற்றமூத்துக்கோல் - பெற்றதாய்போல்
2 முதுகுபற்றிக்கைத் - இதுவென்னப்பர்
3 உறிகள் போல்மெய் - அறிதியாகில் நெஞ்ச
4 பீளைசோரக்கண் - காளையாகிக்கன்று
5 பண்டுகாமரானவாறும் - தண்டுகாலாவூன்றி
6 எய்த்தசொல்லோடு - அத்தனெந்தையாதி
7 பப்பவப்பர்மூத்த - செப்புநேர்மென் கொங்கை
8 ஈசிபோமின் ஈங்கி - நாசமான பாசம் விட்டு
9 புலங்கள்நைய- அலங்கலாய தண்டுழாய்
10 *வண்டுதண்டேனுண்டு - கொண்டு தொண்டர்பாடி
ப—10.

1 ஏனமுனாகிஇருநில - தேனமர் சோலைக்
2 கானிடையுருவை - தேனுடைக் கமலத்து
3 இலங்கையும் கடலும் - விலங்கலிலுரிஞ்சி
4 துணிவினியுனக்கு - அணிமலர்க்குழலார்
5 பேயிடைக்கிருந்து - சேய்முகட்டுச்சி
6 தேரணங்கல்குல் - காரணந்தன்றால்
7 வெந்திறற்களிறும் - அந்தரத்தமரரடி
8 மான்முனிந்தொருகால் - அயனரனைத்தான்
9 கொண்டல் மாருதங்கள் - அண்டமூடறுத்து
10 *வருந்திரைமணிநீர் - வரஞ்செய்த வைந்தும்

1 *கலையும் கரியும் - மலைகொண்டலை நீர்
2 கடஞ்சூழ்கரியும் - இடஞ்சூழ்ந்தெங்கும்
3 உலவுதிரையும் - வானோர்தம்பெருமான்
4 ஊரான் குடந்தை - பேராயிரமுடையான்
5 அடுத்தார்த் தெழுந்தாள் - கடுத்தார்த்தெழுந்த
6 தாயாய்வந்த பேயுயிரும் - மூவடிமண் இன்றேதா
7 ஏனோரஞ்ச வெஞ்சம - வானாய்த் தீயாய்
8 வெந்தா ரென்புஞ்சுடு - என் எந்தாய் சாபம்
9 தொண்டாமினமும் - வண்டார் பொழிலின்
10 *தாராவாரும் வயல் - ஆராருலகத்தறிவுடையார்

1 *வாணிலாமுறுவல் - ஏணிலேனிருந்தேன்
2 சிலம்படியுருவிற்கரு - அலம்புரிதடக்கை
3 சூதினைப்பெருக்கிக் - வேதனைக்கொடுங்கி
4 வம்புலாங் கூந்தல் - எரியெழுகின்ற
5 இடும்பையாலடர்ப் - கடுஞ்சொலார்கடியார்
6 கோடியமனத்தால் - நமனார்பாடியைப்
7 நெஞ்சினால் நினைந்தும் - வஞ்சனேனடியேன்
8 ஏவினார் கலியார் நலிக - பாவினாரின்சொல்
9 ஊனிடைச்சுவர்வைத்து - தேனுடைக்கமலத்
10 *ஏதம் வந்தணுகா - காதலேமிகுத்த கலியன்

1 *அங்கண்ஞாலமஞ்ச - பைங்கணானைக்
2 அலைத்தபேழ்வாய் - மலைத்த செல்சாத்
3 ஏய்ந்தபேழ்வாய் -ஓய்ந்தமாவுமுடைந்த
4 எவ்வம் வெவ்வேல் - கவ்வுநாயும் கழுகும்
5 மென்றபேழ்வாய் - நின்றசெந்தீமொண்டு
6 எரிந்த பைங்கண் — நெரிந்த வேயின்முழை

7 முனைத்த சீற்றம் - கனைத்த தீயும்கல்லு
8 நாத்தழும்ப நான் - காய்த்தவாகை நெற்
9 நல்லை நெஞ்சே! - நெல்விமல்கிக்கல்லு
10 *செங்கணுளியிட்டு - மங்கையாளன் மன்னு

1 *கொங்கலர்ந்தமலர் - பொங்கு புள்ளினை
2 பள்ளியாவது பாற் - வெள்ளியான் கரி
3 நின்ற மாமருதிற்று - கன்றி மாரிபொழிந்
4 பார்த்தற்காயன்று - ஏத்துவார்தம்மனத்
5 வண்கையாளவுணர் - எண்கையானிமயத்
6 எண்டிசைகளுமேழு- ஒண்டிறலவுணன்
7 பாரு நீரெரிகாற்றி - காரும் வார்பனி
8 அம்பரமனல்கால் - கொம்பினன்ன
9 பேசுமின் திருநாமம் - வாசமாமலர் நாறு
10 *செங்கயல் திளைக்கும் - சங்கையின்றித்

1 *தாயே தந்தையென்றும் - வேயேய்பூம்பொழில்சூழ்
2 மானேய் கண்மடவார் - தேனேய்பூம்பொழில்
3 கொன்றேன் பல்லுயிர் - குன்றேய்மேகமதிர்
4 குலந்தான் எத்தனையும் - நிலம்தோய்நீள்
5 எப்பாவம் பலவும் - செப்பார்திண்வரை
6 மண்ணாய்நீரெரி - விண்ணார் நீள்சிகரம்
7 தெரியேன் பாலகனாய் - கரிசேர்பூம் பொழில்
8 நோற்றேன் பல்பிறவி - கோல்தேன் பாய்ந்தொ
9 பற்றேலொன்றுமிலேன் - கல்தேன் பாய்ந்தொழு
10 *கண்ணாய் ஏழுலகுக்கு - திண்ணார் மாடங்கள்

1 *கண்ணார்கடல்சூழ் - விண்ணோர்தொழும்
2 இலங்கைப்பதிக்கு - விலங்கல் குடுமி
3 காரார் கடலும் - சீரார் திருவேங்கடம்
4 உண்டாய் உறிமேல் - விண்டோய் சிகரம்
5 தூணாய் அதனூடு - சேணார் திருவேங்கடம்
6 மன்னவிம்மனிசப் - மின்னார்முகில்சேர்
7 மானேய்மடநோக்கி - தேனே திருவேங்கடம்
8 சேயன் அணியன் - வேய்விண்டுதிர்
9 வந்தாய் என்மனம் - சிந்தாமணியே
10 *வில்லார்மலி - கல்லார்திரள்தோள்

## இரண்டாம் பத்து.

1 *வானவர் தங்கள் - கானவரிடுகாரகில்
2 உறவு சுற்றமென்று - குறவர்மாதர்களோடு
3 இண்டையாயின... - வண்டுவாழ்வடவேங்
4 பாவியாது செய்தாய் - கோவிநாயகன்.
5 பொங்கு போதியும் - எங்கும் வானவர்.
6 துவரியாடையர்மட் - கவரிமாக்கணம்.
7 தருக்கினல் சமண் - மருட்கள் வண்டுகள்.
8 சேயனணியன் சிறியன் - வேய்கள் நின்று
9 கூடியாடியுரைத்ததே - ஆடுதாமரையோனு
10 *மின்னுமாமுகில்மேவு- கன்னிமாமதிள்.

1 *காசையாடைமூடி - வேயினன்னதோள்
2 தையலாள் மேல் காதல் - அன்று செய்த வெம்
3 முன்னோர் தூது... - அவனே பின்னோர்
4 பந்தணைந்தமெல் - நந்தன்மைந்தனுக.
5 பாலனகி ஞாலமேழும் - நீலமார் வண்டுண்டு
6 சோத்த நம்பியென்று - மூத்த நம்பிமுக்கணம்பி
7 திங்களப்பு வானெரி - வண்டுண் தொங்கலப்பு
8 முனிவன் மூர்த்தி - தனியன் சேயன்
9 பந்திருக்கும் மெல் - அந்தரத்தில் வாழும்
10 *இண்டை கொண்டு - கொண்டசீரால்

1 *விற்பெருவிழவும் - பற்றலர் வீயக்கோல்
2 வேதத்தை வேதத்தின் - ஆதியை அமுதை
3 வஞ்சனைசெய்யத் - விஞ்சைவானவர் சாரணர்
4 இந்திரனுக்கென்று - ஆயர் எந்தம் மோடின
5 இன்துணைப்பதுமத்து - பஞ்சபாண்டவர்க்காகி
6 அந்தகன் சிறுவன் - சந்தமல் குழலாள் அலக்கண்
7 பரதனும் தம்பிசத் - குரவமேகமழும்குளிர்
8 பள்ளியில் ஓதிவந்த - பிள்ளையைச் சீறி
9 மீனமர் பொய்கை - ஆனையின் துயரம் தீரப்
10 *மன்னு தண்பொழிலும் - கன்னிநன் மாடமங்கை

1 *அன்ருயர் குலக்கொடி - இரும்பொழில் சூழ்
2 காண்டாவனம் என்ப - அவுணனவன் மார்வ
3 அலமன்னுமடல் - பலமன்னர் படச்சுடரா
4 தாங்காததோர் ஆள - பாங்காகமுன்ஐவ

5 மாலும் கடலார - காலமிது வென்றயன்
6 பாராருலகும் பனி - அப்பேரானைமுனிந்த
7 புகராருருவாகி - பகராதவனாயிரநாமம்
8 பிச்சச்சிறுபீலிபிடித் - நச்சிநமனாரடையாமை
9 பேசுமளவன்றிது - வாசம் மணிவண்டறை
10 *நெடுமாலவன் - உடனே விடுமால்வினை

1 *பாராயதுண்டுமிழ்ந்த - போரானைக்கொம்
2 பூண்டவத்தம்பிறர்க்கு - கணங்களேத்தும்
3 உடம்புருவில் மூன்று - தடம்பருகுகருமுகிலை
4 பேய்த்தாயைமுலையுண்ட—குடமாடு கூத்தன்
5 பாய்ந்தானைத் திரிசகடம் - தேய்ந்தானை நில
6 கிடந்தானைத்தடங் - வளைமருப்பில் ஏன
7 பேணாதவலியரக்கர் - ஊணாகப்பேய்முலை
8 பெண்ணாகியின்ன - எண்ணானை எண்ணி
9 தொண்டாயார் தாம் - பண்டாய வேதங்கள்
10 *படநாகத்தணைக் - கடமாரும் கருங்களிறு

1 *நண்ணாதவாளவு - மருவினியதண்ணார்ந்த
2 பார்வண்ண மட - கார்வண்ணமுதுமுந்
3 *ஏனத்தினுருவாகி - கானத்தின் கடல்மல்லை
4 விண்டாரைவென் - கண்டாரைக்
5 பிச்சச்சிறுபீலி - கச்சிக்கிடந்தவனூர்
6 புலங்கொள் நிதிக் - கலங்களியங்கும்
7 பஞ்சிச்சிறுகூழை - கஞ்சைக்கடந்தவனூர்
8 செழுநீர்மலர்க் - கழுநீர் கடிகமழும்
9 பிணங்களிடுகாட - விசும்பில்கணங்கள்
10 *கடிகமழுநெடுமறு - வடிகொள் நெடுவேல்வலவன்

1 *திவளும் வெண்மதி - குவளையங்கண்ணி
2 துளம்படு முறுவல் - வளம் படுமுந்நீர்
3 சாந்தமும் பூணும்சந் - மாந்தளிர் மேனி
4 ஊழியிற் பெரிதால் - தோழியோ வென்னும்
5 ஓதிலும் உன்பேரன்றி - பேதையேன்பேதை
6 தன்குடிக்கேதும் - மின்கொடிமருங்குல்
7 உளங்கனிந்திருக்கும் - களங்கனிமுறுவல்
8 அலங்கெழுதடக்கை - குலங்கெழுகொல்லி
9 பொன்குலாம் பயலை - மின்குலாமருங்குல்
10 *அன்னமுமீனுமாமை - மன்னுமாமாட மங்கை

*திரிபுரமூன்றெரித்து - எரியன கேசரவா
வெந்திறல் வீரரில் - வந்து குறளுருவாய்
செம்பொனிலங்கு - வெம்புசினத்தடல்
மஞ்சுயர் மாமணிக் - வெஞ்சுடராழியும்
கலைகளும் வேதமும் - நீண்டமலைகளும்
எங்ஙனும் நாமிவர் - தாமும் பொங்கு கருங்
முழுசி வண்டாடிய - தாமரையன்ன
மேவியெப்பாலும் - காவியொப்பார்
தஞ்சமிவர்க்கென் - நஞ்சமுடைத்திவர்
*மன்னவன் தொண்டையர் - கன்னிதன்மாமதில்

*சொல்லுவன் சொற் - பல்லவன் வில்லவன்
கார்மன்னு நீள் - தேர்மன்னு தென்ன
உரந்தரு மெல்லணை - நிரந்தவர்மண்ணை
அண்டமும் எண்திசை - விண்டவரிண்டைக்
தூம்புடைத்திண்கை—தேம்பொழில் குன்று
திண்படைக் கோளரி - வெண்குடை நீழல்
இலகிய நீண்முடிமாவலி - உலகுடை மன்னவன்
குடைத்திறல் மன்னவ - விடைத்திறல்
பிறையுடைவாணுதல் - கறையுடைவாள்
*பார்மன்னு தொல்புகழ் - சீர்மன்னுசெந்தமிழ்

*மஞ்சாடு வரையேழும் - துஞ்சாநீர் வளம்
கொந்தலர்ந்த நறுந் - வந்தனை செய்திசை
கொழுந்தலரும் மலர்ச் - எழுந்தமலர்க்கரு நீலம்
தாங்கரும் போர்மாலி - கோங்கரும்புசுர
கறைவளர்வேல்கரன் - மறைவளரப்புகழ்
உறியார்ந்த நறுவெண் - வெறியார்ந்தமலர்
இருங்கைம்மாகரிமுனிந் - கருங்கமுகுபசும்
பாரேறு பெரும்பாரம் - போரேறொன்றுடை
தூவடிவின் பார்மகள் - சேவடிகை திருவாய்
*வாரணங் கொள் - வாரணங்குழைமடவார்

